உ

"*Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith.*"

"*Seek Truth wherever you can find it,*" But, "*Make your choice and stick to it till you reach the End.*"

ஸத்யம்வத.—Speak the Truth.

"Hitch Your Wagon to a Star. "To Thine Own Self be True.




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] உ [God is Love : Knowledge is Power: *Om.*

ஸத்யமேஜெயம்—Satyameva Jayati.

புத்தகம் 16] 1907-ம்வரு ஜூலைமீ. [சஞ்சிகை . 3

An Appeal to Our Subscribers.

The Viveka Chintamani Publishing Committee request all subscribers to remit their subscriptions to the Viveka Chintamani without delay and to kindly help them increase their subscription list by new additions to it from among their friends and acquaintances.

நமது சந்தாதாரர்களான நேசர்கள் அவரவர்கள் சந்தாத்தொகையை யனுப்புவதோடு புது சந்தாதாரர்களை யும்சேர்த்தனுப்பி யுதவவேண்டுமாய் விவேசிந்தாமணி கமிட்டியார் அவர்களை விநயமாய்க் கேட்டுக்கொள் கிறார்கள்.

# "PROCLAIM THE MOTHER."

## "ஸ்ரீமாதாவின் மஹிமையை மண்டலமெங்கும் பரவச் செய்யுங்கள்."

"உன்னைமறக்கிலெந்தாயுயிரென்னுடம்பில்வாழுமோ
உன்பாலன்றிப் பிறர்பாலென்றனுள்ளஞ்சூழுமோ
என்னைக்கொடுக்கவாங்கிக்கொண்டதென்னகருதியோ
எந்தாய்நின்னைக்கொடுக்கவென்பாலின்றுவருதியோ"—

"எனக்குமுனக்கு மிசைந்தபொருத்தமென்னபொருத்தமோ
இந்தப்பொருத்தமுலகிற்பிறருக் கெய்தும்பொருத்தமோ."

"ஓம். ஸ்ரீமாதா, ஸ்ரீ மஹாராஜ்ஞி, ஸ்ரீமத்ஸிம்ஹாஸனேசுவரி, சிதக்னிகுண்ட ஸம்பூதா, தேவகாரிய ஸமுத்யதா" என்று உலகநாயகியாம் அம்பிகையைத்தொழுதேத்த ஹயக்ரீவர் அகஸ்தியமுனிக்குப்போதித்து அவளது திருநாமங்களாயிரத்தின் அதிரகஸியங்களை யவருக்குபதேசித்தருளினர். அப்படியே நாமும் ஜகன்மாதாவாகிய அம்பிகைபேரைச் சொல்லியேத்தவேண்டும். 'அன்னைசொன்மிக்கமந்திரமில்லை.' அவளைவிட்டால் நமக்குக் கதியுமில்லை. ஆதலால் நாம் அவளைத்தொழுது 'நம்மைப் பீடித்த அஜ்ஞானாந்தகாரத்தைப் போக்கடித்துகொள்ளல்வேண்டும். பராசக்தியினருள் பெறாதவர் மானிடப்பதர்களேயாவர். இந்தியாவிலுதித்த மஹான்களெல்லாரும் ஆதிபராசக்தியினருள் பெற்றவராயே ஜகமெலாம் புகழும் சாகஸத்தொழில்களைச்செய்து முடித்தனர். ஸ்ரீமத் பகவத்பாதசங்கராசாரியஸ்வாமிகள் (ஆதிசங்கராசாரியர்) அம்பிகையினருள்பெற்றதன்றி அவளை யுண்மைப்பூஜையால் உள்ளபடி வசம்செய்துகொண்டு பின்னர் திக்குவிஜயம்செய்து ஷண்மதஸ்தாபனம்செய்தார். ஸ்ரீ கிருஷ்ணசைதன்னியர் பக்தியால் சக்தியம்சமேயாகி அம்பாள் பேரும்புகழும் விளங்கச்செய்தார். ஆதிதொட்டு ஸநாதனதர்மத்துக் கிருப்பிடமாயிருக்கும் இப்பரதக்கண்டமானது ஸ்ரீமாதாவின் திருவருட்பார்வைக் குறைவால் அஜ்ஞானவிருள்மூடி அருமையிழந்து பெருமை குலைந்துபோகும்காலம் வந்துற்றது. இப்பொழுது நல்லகாலம்பிறக்கச் சமயம் நேர்ந்துளது. த்ரிகாலஞானிகளெல்லாம் தேவி துயில்நீங்கி விழித்தெழுங்காலம் வந்துற்றது வந்துற்றதென்று கட்டியங்கூறிப் பேசுகிறார்கள். இந்தியாமுன்னுக்குவருவது ஸ்தூலபலத்தால் அல்ல சூக்ஷ்மபலத்தால் இந்தியா உலகெல்லாமாள விசைந்ததாயிருப்பது தீர்க்கதரிசிகளெல்லாருங் கொண்டுள்ள துணிபு. ஸ்வாமிவிவேகானந்தர் சிகாகோவிலிருந்தெழுதிய கடிதத்தில் இதைப்பற்றி இவ்வண்ணமெழுதியுள்ளார். அதுமுற்றும் சரியாகவிருத்தலால் அந்த மஹானுடைய வாக்கையே இங்குமொழிபெயர்த்துக் கூறுவோம்.

"இந்தியாமுன்னுக்குவரும்—ஆனால் சுத்தமுரட்டு பலத்தாலல்ல— ஆத்மசக்தியாலென்றுணர்க. நீங்களெல்லாரும் உங்களுள்ளத்துறையு "நித்தசுத்தவிமுக்தமாம்" ஆத்மஸ்வரூபத்தையாராதித்துப் பிரத்தியக்ஷானுபவமாகப் பாருங்கள். அதனால் பசிதாகம் சீதோஷ்ணங்களைப் பொறுக்கும் சக்தி யபரிமிதமாகவுண்டாகும். நல்ல மெத்தைவீட்டிலிருந்துகொண்டு சிற்றின்பங்களை யனுபவித்துக்கொண்டு நானும் தெய்வாராதனைசெய்கிறேனென்று பொழுதுபோக்காய்ச் சிலநேரம் மதாப்பியாசம் செய்வதாக பாவனைகாட்டுவது மற்றத்தேசங்களுக்குப் பொருந்தும். அந்தப்போலி அப்பியாசங்கள் இந்தியாவிற்செல்லாது. அப்படிப்பட்டபோலிமதத்தைக்கண்டுபிடித்து வெளியாக்கும் சக்தி இந்தியாவுக்கு இயற்கையாகவே யுண்டு. இந்தியாவில் நாம் தெய்வாராதனைசெய்யும் விதம் அதுவல்ல. கடவுளை நேர் நேராகக்கண்டு தரிசித்துக் "கடவுளுநானுமொன்றானேன்" என்று பிரத்தியக்ஷானுபவத்திலுணர்வதே மத அப்பியாசமாம். அதற்கு சவலைஞானமுதவாது. உண்மைஞானமுணரவேண்டின் நம்முளிருக்கும் குற்றங்களையாராய்ந்து களையவேண்டும். "விட்டதுபற்றெனில் உற்றதுவீடு" என்பதுண்மை. "வீடு" என்றால் எங்கோதூரத்தில் இருப்பதன்று: இங்கேயிப்பொழுது எல்லாப்பந்தமும் நீங்கி ஸர்வசுதந்திரனுயிருப்பதே "வீடு". எல்லா நிர்ப்பந்தங்களினின்றும் விடுபட்டதே "வீடு". தியாகமின்றி உண்மையாக எந்தவேலையும் குறைவறச்செய்யவராது.

இந்தவுலகமே கடவுள் தன்னைக்கொடுத்ததினாலே யுண்டாயிற்று. அதனால் அவருக்குத் தியாகராஜர் என்றுபேரும் வந்தது. பேர், கீர்த்தி, அந்தஸ்து, சிற்றின்பமிவைகளையெல்லாம் அம்பாளுக்கர்ப்பணமாகத் தியாகஞ்செய்து இந்தியாவைமுன்னுக்குக் கொண்டுவரக் கங்கணங்கட்டிக் கொள்ளுங்கள். அவசியமானால் உயிரையும் அம்பாளுக்கர்ப்பணமாகக் கொடுத்துழைக்கவேண்டும். அந்தர்பாவத்தாலாவது பஹிர்யத்தனத்தாலாகாது: பஹிர்யத்தனம் அவசியமில்லையென்றருத்தமில்லை. ஆனால் அந்தர்யாகஞ்செய்து அம்பாளைத் தரிசித்து அவளருட்பிரஸாதத்தால் செய்யுமுயற்சி பலிப்பதுபோல், வெறும் பஹிர்முகயத்தனம் பலிக்காது. ஸம்ஸாரஸாகரத்தைக்கடப்பதற்கு எத்தனையோ மஹான்கள் ஜீவகாருண்யத்தால் பிராணத்தியாகம் செய்திருக்கிறார்கள். ததீசிமுனிவர் இந்திரனுக்குத் தன்முதுகெலும்பைக்கொடுத்தது ஞாபகத்திலிருக்குமே. இக்கலிகாலத்தில் ஸ்தூலத்தில் முதுகெலும்பைக்கொடுக்கவேண்டியதவ்வளவு அவசியமாயில்லை. சற்குணசம்பத்து நிறைந்த தீரத்தன்மை வாசஞ்செய்யும் ஸ்தானமாம் சுஷும்னைநாடியிருக்கும் முள்ளந்தண்டைப் பரோபகாரார்த்தம் அதன் வாசமாம். துரியநிலையிலிருந்துழைத்தலாற்கொடுக்கவேண்டும். துரீயநிலையிலிருந்துலகுக்குழைப்பவர் முதுகெலும்பை ஸ்தூலமாய்க்கொடுப்பவரினும் மேலானவரேயாவர். முன்னம் சத்துவசக்திகளையெல்லாம் ஒன்றுசேர்த்து ஒழுங்குபட ஒரு நிலைப்படுத்தவேண்டும். ஜாதி வருணபேதங்களைப்பார்த்து மயங்காதே; பச்சை, வெளுப்பு, சிகப்பு என்று வருணபேதம் பாராதே. எல்லா நிறங்களுமடங்கியதும் சுத்தவெண்ணிறமானதுமான அன்பின் வடிவாயிருந்து எதையும் செய். உள்ளபடி யுழைக்கவேண்டியதுமட்டும் நமதுகடமை. பலனைப் பற்றி நமக்குவிசாரமில்லை. அது தனக்குத்தானே பலனைத்தரும். ததாகாரமாய் தத்பத லக்ஷியார்த்தமாம் கடவுளோடு ஒன்றுவதற்கிடையூறாயிருக்கும் ஆசார, அநுஷ்டான, ஸ்தாபன பேதங்கள் எதுவானாலும் ஆத்மசக்தியின்முன் நிற்கவாற்றாது சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கிப்போம். வருங்காலத்தைப்பற்றி விசாரமில்லை; அதைக்குறித்துப் பார்க்க வேணுமென்கிற எண்ணமும் எனக்கில்லை. ஆனால் ஒன்றுமட்டும் தீர்க்கதரிசனமாய் என்கண்முன் நிற்கின்றது. அதாவது, பூரணியென்றும் புராதனியென்றும் பேர்பெற்ற "விருத்த அம்பிகை" இளங்குமரியாய் "ஸ்ரீமத்ஸிம்ஹாஸனேசுவரி"யாய், "மஹாராஜ்ஞி"யென்னும் நாமத்துக்குரிய கோலத்தோடு கொலுவீற்றிருப்பதைப் பிரத்தியக்ஷமாய் நான் தரிசிக்கிறேன். இந்தக் காக்ஷி யென் திருஷ்டியினின்றும் மறையாது அப்படியே நிரந்தரமாகவிருக்கக் காண்கிறேன். "உத்யத்பானுஸஹஸ்ரபாயை நமஃ" என்று மஹரிஷிகளும் முனிகளும் வணங்கின வண்ணம் என்கண்முன்னே அவள் திருக்கோலம் நீங்காதிருக்கக் காண்கின்றேன். அவளுடைய மஹிம்னுப்பிரபாவம் முன்னிலுமதிகமாக விளங்குவதைக் காண்கிறேன். ஆகையால் சாந்திநிறைந்து அருள்வாக்கால் ஆசிகூறி உலகெங்கும் அவள் புகழ்பரவ அம்மஹாராஜ்ஞியின் பிரபாவத்தை விளங்கச் செய்யுங்கள்." இனி நவராத்திரிதோறும் கொலுவைத்துப் பூசிக்கும் அம்பிகை நித்தியகொலுவிருப்பதை ஞானக்கண்ணால் பார்த்து ஹிருதயகமலமத்தியில் அந்தர்யாகம் செய்து அவளுக்கு உடல்பொருளாவியையும் அர்ப்பணமாக சமர்ப்பித்துழைப்போமாகவென்பது இவருடைய கருத்து. மற்ற தீர்க்கதரிசிகளுமிப்படியேசொல்லுகிறார்கள்.

# THE IDEAL OF SWADESHI AND SWARAJ—HOW IT WORKS.

## "ஸ்வதேசி-ஸ்வ்ராஜ் லட்சியம்."—அநுபவமுறை.

வெல்லுமளவில்விடுமின்வெகுளியைச்
செல்லுமளவில்செலுத்துமின்சிந்தையை
அல்லும்பகலுமருளொடுதூங்கினுற்
கல்லும்பிளந்துகடுவெளியாமே:—திருமூலர்திருமந்திரம்.

"ஸ்வதேசி" யென்றும் "ஸ்வராஜ்" என்றும் இரண்டு பதங்கள் நூதனமாய் வழக்கத்திற்கு வந்திருக்கின்றன. இவையிரண்டும் உண்மையில் உள்ளபடி பார்த்தால் புராதனமாயுள்ளவைகளே. "ஸ்வ" என்னும் பதம் எப்போதும் தன்னைக்குறிக்கும். த்வந்தபந்தியில் ('நலம்-தீது,' 'சுகம்-துக்கம்' என்னும் பேதபாவனைகள் நிறைந்த நிலையில்) அது 'ஸ்வ-பர' 'தான்-பிறன்' அல்லது 'நான்-நீ' என்னும் வேற்றுமையைவிளக்கும். 'த்வந்தம்' என்பது 'துவம்-துவம்'—'நீ-நீ' என்று சொல்லும் வேற்றுமைபாவத்தைக் குறிக்கும் சொல்லாம். இதை 'துவம் பதம்' என்று சொல்வார்கள். இது வியஷ்டிபாவமாம் ஜீவனைக்குறிக்கும். சமஷ்டிபாவமாம் ஈசுவரனை தத் பதத்தால் குறிப்பார்கள். ஜீவேசுவரபேதம் அஜ்ஞானமுள்ளவரையிலுண்டு. அஜ்ஞானமலம்போய் ஞானசூரியன் உதயமானால் ஜீவேசுவரபேதமற்று விழுந்துபோம். அப்பொழுது நிர்மலமான ஜீவாத்மா (ஜீவன்=சிதாபாஸன்; நிர்மல ஜீவன்=பிரத்யகாத்மா) நானே ஈசுவரன் என்று தன்னை ஈசுவரனோடு அபேதமாகப் பாவிக்கிறான். இப்படியே ஈசுவரனான ஆத்மா ஈசுவரனுக்கு உபாதியாயுள்ள மாயையைத்தள்ளித் தன்னைப்பார்த்துக்கொள்ளும்போது தானே பிரம்மம் என்கிற அத்வைதபாவம் நிறைந்து தனது ஸ்வஸ்வரூபத்தை யறிந்தவனாகி எல்லாப் பந்தங்களினின்றும் விடுபட்டவனாகிறான். அவனைமுக்தனென்றும் பெத்தனென்றும் சொல்வதற்கில்லை. அவனன்றி அவனுக்கன்னியமாய் வேறொன்றில்லாமையால் அவனே எல்லாவற்றிலும் அந்தர்யாமியாயிருந்துகொண்டு தன்னைத்தானே பார்த்து ரமித்துக்கொண்டு எங்கும் தானாய் விளங்குகிறான். அந்த அநுபூதி நிலைமையைச்சொல்லவேண்டுமாயின் அது சொல்லொணாது. ஆயினும் பெரியோர்கள் ("உரையற்றதொன்றை யுரைசெய்யும் ஊமர்கள்") அதைச்சொல்லாமற் சொல்லியிருக்கிறார்கள்.

"தானலதேதுமின்றித் தன்மையீதென்னவொண்ணா
ஞானமாய் ஞானஞேயஞாதுருவிறந்த நன்காய்
ஊனெலாமுருகுமன்பில்வெளிப்படுமொழிவிலின்ப
மானவொண்பரமனுரை யகத்துளேயிருத்தினேனே.'

இது நித்தசுத்த விமுக்தரான அடியவர் ஸ்வாநுபவமென்றால், இறையின் இயல்பு எப்படியோஎனின்:—

"ஜகமெனுமோவியத்தைத்தானெனும் படத்திற்ருனு
மிகுதருதூலிகைத்தால் விளங்கிடவெழுதித்தானே
மகிழ்தரக்கண்டின்புற்றுமாசிலாவறிவாய் நின்றே
யிகமது ப்ரமதாகுமிறைவனதியல்புதானே."

இறைவனியல்பும் அவனிலும் வேறலாத அவனடியார் இயல்பும் இப்படியானல் இவ்விருவர்களில் ஆள்வானர் ஆளப்படுபவனர்? தன்னைத்தானறிந்தவர்கள் தம்மை "அடியவர்" என்று சொல்லிக்கொண்டால், பகவான் அவர்களுக்குத்தோற்றுப்போகாமல் தன்னைத் "தில்லைவாழந்தணர் தம் அடியார்க்குமடியன்" என்று சொல்லிக்கொண்டார். அரசியலும் குடியியலும் உண்மையில் உள்ளபடி தெய்வீகமாக அமைந்துள்ளது இவ்வாறென்றால், தெய்வீகமுறையை மாற்ற யாரால்முடியும்? ஆத்மவுணர்ச்சியின்றி அநாத்மனுயிருப்பவன் தன்னைத்தானறியாமல் எல்லாவற்றையும் தனதாக வெண்ணி, நான், எனது என்னும் அகங்கார மமகாரத்தா லழிந்துபோகிறான். "ஆணவத்தாலே யழிந்தான் துரியோதனன்." அவன் ஆணவத்தைப்போக்கி அவனை தர்மவழியில் கொண்டுவர ஸ்ரீகிருஷ்ணபகவான் தன்னாலான சூழ்ச்சியெல்லாம்செய்து முயற்சித்துப் பார்த்தார். அவர் முயற்சியொன்றும் பலிக்கவில்லை. சாம தான பேதமென்கிற மூன்றுபாயங்களும் பலிக்காமற் கடைசியில் தண்டம் ஒன்றேதான் வழியென்றேற்பட்டபோதும், தனது சேனைபலங்களையெல்லாம் துரியோதனாதியர்களுக்குதவியாகக் கொடுத்துவிட்டுத் தானும் ஆயுதம் தொட்டுச் சண்டைசெய்வதில்லை யென்கிற வாக்குக்கொடுத்துவிட்டு, "தர்மமேஜயம்" "ஸத்யமேவஜயதி" என்று நம்பிய பாண்டவர்கள் பக்ஷத்தில் தானிருந்து பார்த்தனுக்கு சாரதியாகவிருக்கும் தொழில்மேற்பூண்டு பாரதப்போரில் "மெய்யேவெல்லும் பொய்யல்ல" என்பதினுண்மையை உள்ளபடி நிலை நாட்டினார். கபடநாடக சூத்ரதாரியான அந்த கிருஷ்ண பரமாத்மா அத்தருணம் போர்முனையில் அர்ச்சுனனுக்குப் போதித்த வுண்மையை இத்தருணம் ஹிருதயகமலவாசியாயிருந்து இப்பரதக்கண்டத்திலுள்ள எல்லோருக்கும் போதிக்கக்கருணைபூரித்தான்போலும் விளங்குகிறது. எங்கு பார்த்தாலும் ஜனங்கள் அஹம் விரிந்து தங்கள் ஸ்வாதந்தரியத்தை நிலைநாட்டத் தூண்டப்பெற்றவர்களாய்க் காட்டுகிறார்கள். சாமான்ய ஜனங்களும் அநியாய அக்கிரமங்களைப் பொறுக்காமல் தங்களை அநியாயமாய்க்கட்டும் அத்து மீறி நடக்கத்துணிந்தவர்களாகக் காட்டுகிறார்கள். காலக்குறிப்புகளை உள்ளபடி யுணரவல்ல த்ரிகாலஞானிகள் இந்தியாவுக்கு மாதாவாம் மலையரையன்மகள் யோகநித்திரையிலிருந்து விழித்துக்கொண்டாள்போலு மென்றுணர்ந்து, ஐரோப்பா அமெரிக்கா முதலிய தூரதேசங்களுக்குப் போயிருந்தவர்களும் இந்தியாவுக்குத்திரும்பி வருகிறார்கள். முக்தர்களும் முக்தியைவெறுத்து சித்தியை நாடியுழைக்கிறார்கள். அக்காலத்து துரியோதனனைப்போல் இக்காலத்து அரசதிகாரம் செலுத்தும் அதிகாரிகளும் "தர்மமே தலையெடுக்கும்" என்னும் வாக்கியத்தை யனுசரிப்பவர்களென்று சொல்லிக்கொண்டாலும், ஸ்வகாரியப்பிரியர்களாய் அதர்ம வழியில் பிரவேசிக்க அஞ்சாதவர்களாகக்காட்டி வருகிறார்கள். கத்தியும் கேடயமும் துப்பாக்கியும் குண்டும் மற்றுமுள்ள சேனைபலம் திரவியபலம் எல்லாம் தங்களிடத்தேயிருக்

கின்றதெனச்செருக்குற்று நடப்பவர்களாகக்காட்டி வருகிறார்கள். அகச்செருக்கால் மனக்கண் பஞ்சடைந்து நலந்தீதை நாடியறியும் விவேகநுட்பமும் கூர்மழுங்கி யிருக்கிறதாகத் தோற்றுகிறது.

இவர்கள் இப்படி நடந்துகொள்ள, ஜனங்களில் இதுவரையில் காசாலும் பணத்தாலும் வெறுங்கல்வியினாலும் கனதன சிரேஷ்டர்களென்று பேர்பெற்று விளங்கினவர்கள் திடீரென்று தங்கள் செல்வாக்கு ஜனங்களிடத்து முன்போல் செல்லாமற் குறைந்து வரக் காண்கிறார்கள். காசு பணத்தால் நிறைந்தவர்களில்லாவிட்டாலும், கல்வியறிவாலும் உண்மையுணர்வாலும் ஆத்மபுத்தி நிறைந்தவர்கள் எங்கும் தலையெடுத்து தாங்கள் தேஹமாத்திரமேயென்கிற பாவனையைவிட்டு "அஹம் ஆத்மா" "அஹம் சக்தி" "அஹம் பிரம்மம்" என்கிற பாவனை நிறைந்தவர்களாய் தங்கள் ஆத்மசக்தி வளர்ந்து விரிந்து பரவுதற்கிடையூறு வுள்ளஸ்தாபனங்களெல்லாவற்றையும் அலக்ஷியமாய்த்தள்ளி அசட்டைசெய்து, ஜெயிலும், விலங்கும், ஜெயிலிலிடும் வேலையும், முதுகில்விழும் சவுக்கடியும், மனத்தைக்கட்டுப்படுத்த வல்லனவல்லவென்றும், நிர்மலாத்மனுக்குரித்தான இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி மூன்றும் தங்கள் வசமாயிருக்கையில் சைனியபலமும் செல்வபலமும் தங்களைப்பாதிக்க மாட்டாவென்றும், இச்சரீரம் இருப்பதும் போவதும் தங்களுக்கு லக்ஷியமல்லவென்றும் புண்யபூமியாம் இப்பரதக்கண்டமென்னும் மஹா க்ஷேத்திரத்தில் மனுஷன் முக்தியடையப் பிறந்தானேயன்றி பண்டகசாலைவைத்து வஞ்சகஜீவனம்செய்து பிழைக்கும் பாமர ஜீவன்களுடைய விஷயபோகத்திற்கிலக்காக விருக்கப் பிறக்கவில்லையென்றும், அதற்குமாறாக விருக்கும் அரசியல்பு இம்மஹா க்ஷேத்திரத்தில் சிறிதுகாலம் வழங்கலாமாயினும் நிலைத்திருக்க முடியாதென்றும், உண்மையாக உள்ளபடி ஜனங்களுடைய ஸ்வாதந்தரியத்தை அவர்கள் ஸ்வயேச்சைப்படி விர்த்திசெய்யக் கூடியவர்களே அரசியல் தர்மத்துக்கொத்து நடப்பவர்களென்றும், அவ்விதமான அரசியல் தர்மம் ஸ்திரமாக ஏற்பட்டாலன்றி ஜீவகோடிகள் உஜ்ஜீவித்துய்வதற்கு ஆஸ்பதமான ஸநாதன தர்மம் அநாதியாய் ஏற்பட்டுள்ள இப்புண்ணிய க்ஷேத்திரத்தில் எப்போதும்போல் தலையெடுத்துத்தழைக்காதென்றும் ஹிருதய பூர்வகமாகவுணர்ந்து அதற்காக வென்றுழைக்கக்கங்கணங் கட்டினவர்களாயிருக்கிறார்கள். க்ஷேத்திர க்ஷேத்திரக்ஞவிபாக யோகத்தில் தேர்ந்தவர்கள் க்ஷேத்ர சாதனமின்றி க்ஷேத்ரக்ஞனுக்கு ஸ்வதந்தரமில்லையென்று அறிவார்கள். ஆகையால் இப்புண்யக்ஷேத்திரத்தின் மஹிமை குன்றாதபடிக்கும், இங்கேயவதரிக்கும் ஜீவகோடிகள் ஸநாதனதர்மத்தை யனுஷ்டித்து இகபரசாதகங்களால் முக்தியடையும் பொருட்டும் எல்லாஜனங்களும் சிரவணமநந நிதித்தியாஸனங்களால் இகபரசுகானுபவங்களுக்குப் பாத்திரர்களாகும்படி இரண்டு பெரிய மஹா லக்ஷியங்களை யேற்படுத்தியிருக்கிறார்கள். இதில் ஒன்று: ஸ்வதேசலக்ஷியம். இதைசுருக்கமாய் ஸ்வதேசி யென்று சொல்லுகிறார்கள்,

"வரைராஜனுக்கிருகண்மணியாயுதித்த மலைவளர்காதலிப்பெணுமையே!" யென்று பெரியோர்கள்பாடிப் புகழ்ந்து முக்திபெற்ற நம் அம்மைக்கு இமயமுதல் கன்யாகுமரி வரையிலுள்ள இப்பரதக்கண்டமே அடியார் புகழும் திருமேனியாம். இது அவளுடைய

தேஹம். அவளுக்கு க்ஷேத்திரமான பாக்கியத்தால் தான் இத்தேசத்துக்குப் புண்யபூமி யென்றுபேர். அவள் திரிகோணஸ்வரூபி. இந்த பரதக்கண்டமும் அப்படியேத்ரிகோண ரூபமாக அமைந்துள்ளது. இப்படி க்ஷேத்திரரூபமாயுள்ள அந்த அம்மையின் பதி க்ஷேத்ர க்ஞன். "சுத்தமுத்த விமுக்த"மாய் விளங்கும் அவரதியல்பாயமைந்த ஸ்வமஹிம்னேயே, மற்றொன்றாகிய "ஸ்வராஜலக்ஷியம்." இதைச்சுருக்கமாய் "ஸ்வராஜ்" என்று சொல்கிறார்கள். இந்த ஸ்வராஜலக்ஷியம், ஸ்வதேசலக்ஷியத்தோடு இணைபிரியாது அத்வைதமாக அம ர்ந்துள்ளது. ஆகையால் நம் தாயாம், பார்வதிதேவியாரிடத்து அவளுடைய மக்க ளாம் நாம் சென்று சரணடைந்து "தாயே உன் திருவயிற்றிலவதரித்தும் நாங்கள் வயிற்றுப்பாடே பெரிதாக வுழைத்துழைத்தும் பசியாறாது தாய்முகமறியாக் குழந்தை போல் தவிக்கிறோம்! ஸநாதன தர்மம் தலைகவிழ்ந்துபோகலாயிற்று! அதர்மம் தலையெடு த்து இல்லாத அக்கிரமங்களெல்லாம செய்து தலைவிரிகோலமாக ஆடுகின்றது. அம்மணி தாயே, நின் திருமுக தரிசனமின்றி மழைமுகங்காணுப்பயிர்போல் எங்கள் மனம் வாட லுற்றோம். அநாதையான எங்களுக்கு நீயன்றி வேறுகதியில்லை. ஆகையால் எங்களை இதுகாறும்போல் அடித்தொறுக்காமல் அணைத்தாண்டு காத்தருள் செய்யவேண்டும் தாயே! நின்திருக்கமலபாத மின்றி எங்களுக்கு வேறுபுகலிடமில்லை! அபயம், அபயம், தாயே! சர ணம்! சரணம்! தாயே வந்தனம்! வந்தேமாதரம்! வந்தேமாதரம்!" என்று இப்பரதக்கண்ட மெங்கும் இரண்டுவயதுப் பாலர்கள்முதல் 80-வயதுக் கிழவர்களீறாக ஆண்பெண்டங்களும் வீடுவீடாகவும் ஊர் ஊராகவும் காடுவனம் நாடு நகரெங்கும் அவர்கள் அபயக்குரல் கோஷம் அதிரொலிபோற் கேட்கவும், ஆகாசவாணியும் பூமாதேவியும் அவ்வதிரொலி பொறுக்காமல் துயிலொழித்து ஒருவரையொருவர் பார்த்துக்கொள்கிறார்கள். ஆகாசவாணியும் பூமாதேவி யும் துயில் விழித்து ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டால் என்னநேரிடும் தெரியுமா? மேற்றிசையார் சாஸ்திரப்படிக்கும் ஸ்தூல அனுபவப்படிக்கும் மின்னலும் இடியும் தோன் றும். ஸ்தூலமாயுள்ள ஒவ்வொன்றுக்கும் சூக்ஷ்மமான ஒரு வடிவும், ஸ்தூலசூக்ஷ்மமிரண்டுஞ் சேர்ந்த காரியத்துக்குக் காரணமான ஒரு ஆதி வடிவு முண்டென்று நம்மவர்களுக்கு நாம் சொல்லாமலே தெரியும். மனதுக்குள்ளே ஜபிக்கும் அஜப எண்ணத்தால் எழும் ஆத்ம சக்தி ஆகாசவாணி பூமாதேவியை யெழுப்பி, யவர்கள் கண்கலக்கும்படிச் செய்ய, அப்படிக் கலந்தமாத்திரத்தில் பிரணவஸ்வரூபியாம் விக்னேசுவரர் உண்டாகிறார். அம்பிகையாலும் அழிக்கலாற்றாத பண்டாசுரனுடையவிக்னயந்திரங்களைத் தன்கொம்பினால் குத்தியழித்து ஹதம்செய்த எம்பெருமான் பெரியபிள்ளையார் அவதாரமானால்அப்புறம் நமக்கு பயமென்ன? நிர்ப்பயமே யென்பதிற் சந்தேகமில்லை! இது நம்முடைய ஸ்வானுபவத்திலிருந்து உண்மை யென்று உள்ளபடி உறுதியாய்ச் சொலத்துணிந்தோமாயினும், பெரியோர் வாக்கும் சுருதி வசனமும் அப்படியேயிருக்கிறது. உதாரணமாக எனையாண்டருளிய அகண்டஸச்சிதாநந்த ஸ்வரூபிணியாம் ஆனந்தத்தாய் அவள் குழந்தைகளாம் எங்களுக்குப் பலகாலும் வற்புறுத்தி க்கூறினதோர் வசனத்தை ஆத்மசகோதரர்கள் சகோதிரிகளாம் எல்லாருக்கும் மனோதிட னும் அவளது திருவருட்பிரசாதமு முண்டாக இங்கே யெடுத்துக்கூறுவோம். 'வந்தேமாத ரம்" என்னும் இங்கிலீஷ் பத்திரிகை இவ்வுண்மைகளையெல்லாம் நன்றாக வெடுத்துக் காட்டி யெழுதுவதாயிருக்கிறது.

"மண்கலங்கினும் வானதுபொய்ப்பினும் வரைகளுந்தடுமாறி
விண்கலங்கினும் விரிசுடர்வீழினும் வேலையும்வறளாகி
யெண்கலங்கினுமிலையிலை யொருதுயரிதுவுணரெழில்நெஞ்சே
கண்கலந்தெமையாண்ட நற்சொரூபன் கழலிணை நமக்குண்டே."

"குசவன் திருகையிலேற்றியமண்ணைக்
குசவன் மனத்துற்றதெல்லாம்வனைவன்
குசவனைப்போலெங்கள்கோனந்திவேண்டி
லசையிலுலகம் அதுவிதுவாமே"—திருமூலர்திருமந்திரம்.

ஓம் ஸ்ரீ அகண்டாநந்த ஸத்குருவேநம:

## "மெய்யேவெல்லும் பொய்யல்ல."

### இராஜாம்பாள் சரித்திரம். *

I

"மெய்யேவெல்லும் பொய்யல்ல" என்னும் சுருதிவாக்கியத்தினுண்மையை ஸ்தாபிக்கவேண்டி அரிச்சந்திர புராணம் முழுவதையும் எழுதினர்கள் நம்பெரியோர். "தர்மமேஜயம்" என்பதின் உண்மையை ஸ்தாபிக்க மஹாபாரதம் முழுவதையும் எழுதிவைத்தார்கள். இப்படியே ஒவ்வொரு உத்தமகிரந்தமும் ஒரு உண்மையை ஸ்தாபிக்க வென்றே யெழுதப்பெற்றதாயிருப்பது விளங்கும். இப்படி மேலோர் எழுதிய மஹாகிரந்தங்களைப்படித்தவர்கள் அல்லது அவர்கள் காட்டிய வழியில் மனதைச்செலுத்தி எல்லாவற்றையும் தத்துவ மாத்திரமாகவும் தத்துவங்களின் தோற்றமாத்திரமாகவும் பார்க்கப்பழகினவர்கள் ஒரு புஸ்தகத்தையெடுத்து வாசித்தால், இதன் உட்கருத்து என்ன? இதனால் விளங்கும் நீதியென்ன? என்று ஆராய்ந்தூகிப்பது இயல்பாயிருக்கிறது. ஒவ்வொருகதையும் ஒரு விதத்தில் ஒரு நீதியைப்போதிக்கும். "கதைக்குக்காலில்லை" யென்பது மெய்யாயினும் பொய்க்கதை யெழுதுவதிலும் மெய்ப்பொருளுணர்ச்சி யிருந்தாலன்றி பொய்யை மெய்போற் சொல்லும் சொல்வன்மை உண்டாகாது. "பொய்யைச் சொன்னாலும் பொருந்தச்சொல்லு" என்று சொல்லும் பழமொழியின் கருத்து இதுவே. மெய்யுணர்வில்லாமனமானது ஒரு வழிப்பட்டு நிற்காததலால், மெய்யுணர்வின்றிப் பொய்சொல்லும்வன், வார்த்தைகளை யென்னதான் இட்டுக்கட்டிச்சாமர்த்தியமாய்ப் பொருத்திச்சொன்னாலும், "கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளிலேதெரியுமென்றபடி அவன் புளுகுவெளியாய்விடும். உண்மையைச்சொல்லுகிறவன் மனோதர்மத்தை யொட்டிப்பேசுகிறவனாதலால் அவன்சுத்த பயங்கொள்ளியாகவிருந்து வேறுகாரணங்களால் மனோசஞ்சல மடைந்தாலன்றி அவன் வார்த்தை புரளாது. சாக்ஷிகளை விசாரித்து உண்மையை யறிவதிலுள்ள மர்மம் இதுதான். மனதுக்கு சுபாவமாக தன்னைத் தானறியும் சக்தியில்லை. மனதிலும் மேலானவொன்றால் மனதை யறியவேண்டுமேயன்றி மனதால் மனதையறிவது அசாத்தியம். ஆத்மபுத்தியைக் கொண்டு மனதைச் சோதிக்கலாம். அதன் இயல்பையும் அறியலாம், பேதபுத்தியைக்கொண்டு மனதையறிய முடியாது. "கள்ளனுக்குள்ளே கிள்ளன்" என்கிறபடி மனதே பேதரூபமானதால் அதிற் பிறந்த பேத புத்தியைக்கொண்டு அதையறிய முடியாது.

* ஓர் இனிய தமிழ் நாவல். ஜே. ஆர். ரங்கராஜா அவர்களால் எழுதப்பெற்று, சென்னை கார்டியன் அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது. விலை அணா 12.

"மெய்யேவெல்லும் பொய்யல்ல" என்ற மேலுரையிலுள்ள தத்துவத்தை காரியார்த்தமாக வேண்டிய அளவு எடுத்துச்சொன்னோம். சொன்னாலும் காரணமாத்திரமாயிருப்பதைக் காரியப்படுத்திச் சொன்னாலன்றி மனதை நிறுத்தியுணரவல்லமை யில்லாதவர்களுக்கு உண்மை விளங்காது. "மனதை நிறுத்தியுணரும் வல்லமை" யென்று நாம் சாமான்யமாய்ச்சொன்னதை மனோதர்மங்களையுணர்ந்தும் யோகசாஸ்திரம் "தாரணத்தியான சமாதி" யென்றும் "யோகஸம்யமம்" என்றும் சொல்லும். திரிகோணவடிவான ஸ்படிகம் எப்படி சூரியரஸ்மியைப் பலவர்ணங்களாகவும் பிரித்துக்காட்டும் சக்திவாய்ந்ததாயிருக்கிறதோ அப்படிப்போல் த்வந்த பந்திகளிலேயே ஒன்றை விட்டொன்று பற்றித்திரியும் மனக்குரங்கு (அதாவது, பேத பாவனையிலேயே உழலும் மனம்) துவந்துவங்களை விட்டு அவைகளுக்கெல்லாம் சாக்ஷியா யிருக்கும் (திரிகோண சிரஸாம்) ஆத்மஸ்வரூபத்தில் இமைப்பொழுதேனும் ஐக்கியப்பட்டு நிற்குமேல், அந்த இமைப்பொழுதில் அது உண்மையைக் கிரகிக்கும்சக்திவாய்ந்ததாகும். "சாஸ்திரமோதும் சதிர்களைவிட்டு நீர் மாத்திரைப்போது மறிந்துள்ளே நோக்குமின்" என்று திருமூலதேவர் சொன்னதின் சூக்ஷமம் இதுவே. அந்த சக்தி மனதையடக்காத பாமரஜனங்களுக்கில்லையாதலால், அவர்களுக்குண்மையுபதேசம் செய்யுங்கால் அவர்கள் மனதை இந்திரியங்களை விஷயப்பற்றுகளிலேயே விட்டுக்கொண்டுபோய் சிக்கு முக்கான சந்தர்ப்பங்களில் கொண்டுவிட்டு அங்கே தொந்தபந்திகளில் ஒன்றான சுகமோ, துக்கமோ, அல்லது, இன்பமோ, துன்பமோ, நலமோ, தீதோ ஒன்றில் மூழ்கவிட்டு இன்ப துன்ப உணர்ச்சி தாங்கமாட்டாமல் அது லயித்துப்போக விடவேண்டியது. மனம் லயித்த அந்த சமயத்திலே பளிச்சென்று மின்னல்போல் உண்மையுணர் வுதிக்கின்றது. உள்ளே மனம் லயித்தால் வெளியே மூச்சுநின்றுபோகிறது. ஆகையால் மூர்ச்சையுண்டாகக்கூடிய சந்தர்ப்பங்கள் நிறைந்த கதையெதுவோ அது மிகவும் உண்மையுணர்வுக்குச்சாதகமானதென்று சொல்லலாம். இதையே நவரசம் பொழியும் நற்கதையென்று சொல்லுவர் பெரியோர். வெளியில் நவக்கிரகங்களாய்த் தோன்றுவது உள்ளே மனதின் நவசக்திகளாம். நவசக்திகளும் ஓடுவதுநின்று ஒடுங்கினால் அவற்றின் சமஷ்டி ரூபமே பராசக்தியாம். சலனரூபமான சக்திகள் நிச்சலனமானபோது ஆவரணங்களெல்லாம் நீங்கிய அவற்றின் சமஷ்டி ரூபம் எதுவோ அதுவே ஆதி பராசக்தியாம். இந்த சக்திகள் 21,600 என்று பாவனோபநிஷத்தில் கூறப்பட்டிருக்கிறது. உண்மையுணர்ந்த மனிதன் ஒருநாளில் விடும் உசுவாச நிசுவாசங்களின் தொகையும் 21,600 என்று கணக்கிட்டுக் கண்டுபிடித்திருக்கிறார்கள். இந்த 21,600 யும் நவகண்டங்களாகப்பிரித்து உள்ளே நவசக்திகளென்றும், வெளியே நவக்கிரகங்களென்றும் பேரிட்டிருக்கிறார்கள். இப்படி அண்டமும் பிண்டமுமொன்றாயிருப்பதால் பகிர் முகத்தில் பிரத்தியக்ஷமான நவக்கிரகங்களின் ஓட்டத்தைக்கொண்டும் நிலையைக்கொண்டும், அஹமுகத்தில் பிரத்தியக்ஷமான உள்ளனுபவத்தை ஒவ்வொரு ஆத்மாவுக்கும் உள்ளபடி சொல்லலாம். இப்படி மூச்சுக் காற்றும் பிசகாமல் வகுத்தறிந்து சொல்வதுண்டெதுவோ அதற்கு ஜ்யோதிர் பாவம் என்று பேர். அதிலேயிருந்துண்டானது சோதிடசாஸ்திரம். இந்த சோதிட சாஸ்திரம் உள்ளபடி பார்த்தால் உண்மையேயானாலும், அதை தன்னைத்தானறிந்த மஹான்களன்றி மற்றவர்கள் உள்ளபடி யுண்மையாய்ச்சொல்வது கூடாமை. சாஸ்திரங்களை மட்டும் படித்துத்தன்னுணர்வின்றிச் சொல்லுகிறேனென்பவர்களெல்லாம் சுத்த ஆஷாடபூதிகளே யன்றி வேறல்ல. அறிவின்றி ஆத்மசக்தியில்மட்டும் ஒருவித மூடநம்பிக்கையுள்ள நமது ஜனங்கள், இந்த சோதிடர்களை நம்பிக்கெட்டுப்போவதுபோல் வேறுயாரும் கெட்டுப் போவதில்லை.

இந்த இராஜாம்பாள் சரித்திரம் இப்படிப் பட்டசோதிட நம்பிக்கையினுண்டாகும் அநர்த்தங்களிலிருந்தே யுண்டானது. காஞ்சிபுரத்திலே சாமிநாத சாஸ்திரிகள் என்று ஒரு சத்திய சந்தர். கதைக்குக் காலில்லையாதலால் அவர் இருந்தாரோ இருக்கிறாரோ நம்மால் சொல்லமுடியாது. பொய்க்கதையிலுள்ள பொருத்தத்தைக்கொண்டு அதன் மெய்யையுணரவேண்டுமேயன்றி வெளுத்ததெல்லாம் பால் என்று நம்பிமோசம் போக

க்கூடாது. உண்மை தேசகாலத்துக் கதீதமானதாலும் நாமரூபத்துக் கெட்டாததாகையாலும், இக்கதையில் வரும் தேச, கால, நாம ரூபவர்ணனைகளெல்லாம் உண்மையை யுள்ளபடி நிர்வாணமாய் சபையில் கொண்டுவந்து நிறுத்தினால் பார்ப்பவர்கள் கண்கூசிப் பார்க்கமுடியாமற் போமென்று, கிரந்தகர்த்தா திருஷ்டிபலம்குறைந்த சாதாரண ஜனங்கள் பார்க்கக்கூடியதாயிருக்கும்படி உள்ளபடியுள்ள உண்மைக்கு ஆடையாபரணாலங்கிருதபாவனமாக தன் மனோசிருஷ்டியாலுண்டுபண்ணி அதை யெல்லாரும் நம்பும்படி பல்லாருக்கும் பரிச்சயமானவாகவுள்ள காலதேசநாமரூப சந்தர்ப்பங்களைச் சேர்த்துத் தமது கதையில் ஒட்டவைத்ததாகக்கொள்ளவேண்டும். இவைகளையெல்லாம் அஹமுகத்தால் பார்த்தால் இவற்றின் உண்மை விளங்கும்.

இந்த சாமினாத சாஸ்திரி பணத்தாலும் குணத்தாலும், ஸத்யத்தாலும் சாந்தத்தாலும் நிறைந்த உத்தமர். அஷ்டைசுவரியமும் அவரிடத்தில் விளங்கிற்றென்று சொல்வேன். ஆனால் அதற்கு ஒரு குறையேற்படும். ஏனென்றால், இந்தப் புண்ணியவானுக்கு அவித்தையே உருவெடுத்து வந்ததுபோல் ஒரு தர்மபத்னியிருந்தாள். அவள்பேர் கனகவல்லியென்று கதையில் சொல்லப்பட்டிருக்கிறது. அவள் குணத்தைநோக்கினால் "கரும்பொன்வல்லி" யென்கிற பேர்தான் அவளுக்கு உண்மையாகப் பொருந்தும். சாமிநாத சாஸ்திரிகளிடத்தில் தர்மசிந்தையும் பொறுமையும் விவேகமும் பெருந்தன்மையும் ஸத்யமும் பொருந்தியிருந்ததற்குச் சரியாக இவளிடத்தில் ஸ்வயநய சிந்தையும், பொறாமையும், அவிவேகமும், அற்பத்தன்மையும், பொய்மையும் நிறைந்திருந்தன. இவள் வயிற்றில் 'சிப்பியில் முத்துப்பிறந்தது' போலும், அவித்தையிலிருந்து வித்தையுண்டானதுபோலும், இருளில் ஒளிபிறந்தாற்போலும், ஸ்ரீராஜராஜேசுவரியின் ஒரம்சமே வந்து சாமிநாத சாஸ்திரிகளின் ஸத்யத்துக்குவந்து அவரிடத்திலவதரித்து இவள் வயிற்றில் வளர்ந்து பிறந்ததுபோலும் இராஜாம்பாள் என்னும் பெண்மணிபிறந்தாள். இந்தப்பெண் சாமிநாத சாஸ்திரிகளுக்குப் பிறந்தஆறுகுழந்தைகளில் ஏக புத்திரியாய் மிஞ்சினவள். அவருக்கு வேறே புத்திரனில்லாமையால், அவருடைய மைத்துனனாகிய நடேசனைத் தன் வீட்டில் கொண்டுவந்து வைத்து தன்னருமைப் புதல்வன்போல் பாராட்டி வளர்த்து வந்தார். இதெல்லாம் அவர் மனைவியின் தந்திரமென்றாலும் அவர் சத்தியசந்தராதலால் ஒரு தரம் அவனைப் புத்திரனைப்போல் வளர்க்க உடன்பட்ட பிறகு அப்படியே பேதமின்றி நடந்து வந்தார். தமக்கைக்குள்ள குணங்களெல்லாம் தம்பிக்கும்பொருந்தியிருந்ததோடு ஆண் என்கிற அகம்பாவமும் கேட்ட பணம் கிடைக்குமென்கிற தைரியமுமிருந்ததால் இவன் மனம் நன்னடக்கையில் விர்த்தியடையாமல் துர்நடத்தையிலேயே விர்த்தியடைந்து வந்தது. இதைக்கண்ட சாமிநாத சாஸ்திரிகளுக்கு இவனிடத்தில் மனம் விண்டுபோய்விட்டது. கனகவல்லிக்கோ, தம்பி யெப்படியிருந்தாலும் தன் பர்த்தா கோடீசுவரனாயிருப்பதாலும், தன் ஏகபுத்திரியை அவனுக்கே கொடுக்கவேண்டுமென்கிற எண்ணம் அவள் மனதில் குடிகொண்டிருந்ததாலும், பெண்புத்தி பின்புத்தியென்றபடி அவனைச் சரியானபடி கண்டித்து நல்வழிக்குக்கொண்டுவராமல் அவனுடைய துன்மார்க்கங்களை யெல்லாம் மூடிமூடி வைத்து வந்தாள். சாமிநாத சாஸ்திரிகளுக்குத் தன் கண்ணுக்கு கண்ணான ஏகபுத்திரியை ஸத்குணசம்பன்னனான கோபாலன் என்னும் அடுத்த வீட்டுப்பையனுக்கே கொடுக்கவேண்டுமென்ற எண்ணம் உறுதியாகவுண்டு. அவருடைய பத்னிக்கு எப்படியானாலும் தன்பெண் இராஜாம்பாளை தனது தம்பி நடேசனுக்கே கொடுக்கவேண்டுமென்கிற உறுதியான கள்ளஎண்ணம் மனத்திலுண்டு. சாமிநாத சாஸ்திரிகள் இவளுடைய மார்ஜாலங்களுக்கெல்லாம் இந்த ஒரு விஷயத்தில் மட்டும் மசிந்து வருகிறவராகக் காணாமையால், கைகேயி சூழ்வினை செய்ததுபோல், வேறொரு சூழ்ச்சி செய்தாள். நடேசனுக்கு இராஜாம்பாளைக் கொடுப்பதென்றைத் தவிர வேறு என்ன வேண்டுமானாலும் உன்னைத் திர்ப்தி செய்வதற்காகக் கொடுக்க சித்தமாயிருக்கிறேன் என்று சொன்னதோர் வார்த்தையைக்கொண்டு அவன் பேருக்கு அவருடைய ஆஸ்தியில் பாதியை உயில் எழுதி வைக்கும்படிச் செய்தாள். அதற்கும் சாமினாத சாஸ்திரி சம்மதித்து

அப்படியே 30-லக்ஷரூபாய் அவனுக்கு சேரும்படி உயில் எழுதி வைத்தார். இந்தமட்டும் வாய்த்ததேயென்று சும்மாவிருக்காமல் சூன்யபுத்தியுள்ள கனகவல்லி பின்னும் எப்படியாவது சாமிநாத சாஸ்திரிகள் மனதுக்கு விரோதம் வந்தாலும் சரி, இராஜாம்பாளை நடேசனுக்கே கொடுப்பதென்று சூழ்ச்சிசெய்ய ஆரம்பித்தாள். இராமண்ணுவென்னும் பிராம்மணார்த்த ஜீவனம் செய்யும் அசல் போக்கிரி வைதீகனையழைத்து பெருந்தொகை லஞ்சம் கொடுத்து ஜோஸியர்கள் ஜாதகம்பார்த்துச் சொல்லும்போது கோபாலனுக்கும் இராஜாம்பாளுக்கும் பொருத்தமேயில்லையென்றும், விவாகம் செய்தால் பெண் 6 மாசத்தில் இறந்துவிடுமென்றும் சொல்லும்படி இரகசியமாக ஏற்பாடு செய்தாள். வீடு இரண்டுபட்டால் கூத்தாடிக்கெளிசல்லவா? சாமிநாத சாஸ்திரிகள் மனமும் அவர் பத்னி மனமும் இராஜாம்பாள் கலியாணவிஷயத்தில் வேறுபட்டிருக்கிறது கூத்தாடி இராமண்ணுவுக்குத் தெரியவரவே அவன் எரிகிற வீட்டில் பிடுங்கினது லாபம் என்று உடனே கலகநெருப்பை மூட்டிவிட்டான். ஜோசியர்கள் செய்தமோசத்தையும் இராமண்ணுவின்போக்கிரித்தனத்தையும் இங்கே சொல்லிமுடியாது. இவர்கள் கொடுமையைக் கிரந்தத்தில் நேரவாசித்தே யறியவேண்டும். சாமிநாத சாஸ்திரி சத்திய சந்தராதலால் இதிலெலாம் ஏதோ மோசமிருக்கிறதென்றுணர்ந்து ஜாதகம் பொருந்தினும் பொருந்தாவிட்டாலும் நான் கோபாலனுக்கே பெண்ணைக்கொடுப்பேனென்று சாதிக்கத் தொடங்கினர். இராமண்ணுவுக்கு இது பழம் நழுவி பாலில் விழுந்தது போலாயிற்று. தகப்பனர் கோபாலனுக்கே பெண்ணைக் கொடுக்கவேண்டுமென்று பிடிவாதமாகப் பிரயத்தனம் செய்ய, தாயார் அதெல்லாமில்லை என் தம்பி நடேசனுக்கே இராஜாம்பாளைக்கொடுக்கச் சூழ்வினைசெய்வேனென்று அவர் மனோரதம் நிறைவேறுதபடி முன்பின் வருவதுணராமல் இல்லாத சூழ்ச்சிகளெல்லாம் செய்யவாரம்பிக்க, இராமண்ணு அவ்வூர் அக்கிரம ஸப்மாஜிஸ்திரேட்டு நீலமேக சாஸ்திரிக்கு 54-வயதாயிருந்தாலும் பாதகமில்லையென்று அவருக்கே இராஜாம்பாளைக் கலியாணம் செய்து வைக்கிறேனென்று சபதங்கூறிக்கொண்டு அவரிடம் 10-ஆயிரம் தாகு வாங்கிக்கொண்டு வேலை செய்தார். இப்படி சூழ்வினைசெய்ய ஆரம்பித்தவர்கள் ஒவ்வொருவரும் ஆழமறியாமலிறங்கி விட்டு ஆற்றேடு போகும்போதும் நமது காரியமே ஜயிக்கப்போகிறதென்று மனப்பால்குடித்து வந்தார்கள்.

அக்கிரமத்தில் துணிந்திறங்கி விட்டால், அப்புறம் நிற்பதேது! ஒரு சின்னப்பொய் சொல்லி அதைச்சாதிக்க ஆயிரம் பெரிய பொய் சொல்லவேண்டி வருவதைப்போல், ஒரு சின்னத்தந்திரம் செய்யப்போய் அந்தத் தந்திரம் வெளியாகாதபடி ஆயிரம் பெரிய தந்திரங்கள் செய்யவேண்டிய தவசியமாக முடிகிறது. பிராமணார்த்தப்புளுகு, ஜோசியப்புளுகில் கொண்டுவிட, அது அவர்களெல்லாரையும் அதிகாரப்புளுகாம் மாஜிஸ்திரேட்டு வலையில் சிக்கவைத்தது. மாஜிஸ்திரேட்டு நீலமேக சாஸ்திரிக்கு இராஜாம்பாளிடத்திலும் அவள் பேரிலுள்ள 30-லக்ஷ ரூபாயிடத்திலும் ஆசை பிறக்கவே, அவர் 30-வருஷமாய் அக்கிரமங்கள்செய்து லஞ்சம் வாங்கிச்சேர்த்த 10-லக்ஷ ரூபாயும் மூக்குத்தூளுக்கு ஆகாதென்று அவருக்குத்தோற்றிவிட்டது. ஆசையொன்றே அல்லல் படுத்தும், மண்ணுசை, பெண்ணுசை, பொன்னுசை மூன்றும் மனச்சாக்ஷியை விற்றுமுடிந்த நீலமேக சாஸ்திரியினுள்ளத்தில் ஏககாலத்தில் குடிபுகவே அவருடைய சதியோசனைகளுக்குக் கேட்பானேன்! இராமண்ணு சொன்ன சதியோசனையைக் கேட்டு நீலமேகசாஸ்திரி தன்னைப்போலொத்தவரும் தன்னிடத்திற்கூட வெற்றிலைபாக்கு வாங்கத்தக்கவருமான போலீஸ் இன்ஸ்பெக்டர் மணவாள நாயுடுவைக்கொண்டு இரவு 8-மணிக்குமேல் சாமிநாத சாஸ்திரிகள் வீட்டில், களவுபோனநகைகளைக்கொண்டுபோய் வைத்து, அவரை கூட்டக்கொள்ளையில் சம்பந்தப்பட்டவராகப்பிடித்து விலங்கு போட்டுக்கொட்டடியிலடைத்து போலீஸ் மரியாதைகள் செய்யத்தொடங்கினர். இராமண்ணு நயவஞ்சகமாய்ப் பொய்சொல்லி; அவர் தாகம் தாங்காமல் தபித்தபோது தாகசாந்திக்கு தீர்த்தம் கொண்டுபோய்க் கொடுப்பவர்போல், கொட்டடிக்குள்சென்று, நீலமேக சாஸ்திரிக்குப்பெண்ணைக் கொடுக்கிறேனென்று வாக்குக்கொடுத்தால் அவர் கஷ்டங்களெல்லாம்

ஒரு நிமிஷத்தில் பறந்துபோமென்றும், இல்லாவிட்டால் அவர்மட்டுமல்ல கோபாலனும் குற்றக்கேஸில் அகப்பட்டுக்கொள்வானென்றும் பயமுறுத்தினர். என்ன நேர்ந்தாலும் என் கண்ணான இராஜாம்பாளை அந்த லஞ்சப் புரட்டனுக்குக்கொடுப்பேனென்று நான் சொல்லமாட்டேன், சொல்லிவிட்டால் சொன்னசொல் புரள்வது எனக்கு சாத்தியமில்லையால் அந்தவாக்கு என் பிராணன்போனாலும் நான் கொடுக்கமாட்டேன் என்று விட்டார். சதிகாரனான இராமண்ணாவாத்தியார் உண்மையாக அவரையுள்ளபடி வாக்குதத்தம் செய்யச்சொல்வது முடியாதென்று கண்டுகொண்டு, பதுங்கிநின்று ஒட்டுக்கேட்டுவரும் ஸப்மாஜிஸ்திரேட்டு மனங்களிக்க ஏதாவது செய்யவேண்டுமென்று தனக்குள் ஆலோசித்துக்கொண்டு, சாமிநாதசாஸ்திரி காதண்டையிற்போய் நீண்டகாலம் தண்டனையடைந்து விடுபட்ட ஒருகைதி இன்னம்மூன்று தினங்களில்ஸப்மாஜிஸ்திரேட்டு நீலமேகசாஸ்திரியைக்கொன்றுவிடுவதாகச்சபதம் செய்து விருது கட்டிக்கொண்டிருப்பதால்,வாக்குக் கொடுத்தால் அப்படிச்செய்யும்படி நேரிடாதென்று என்னவென்னமோ இல்லாதபுளுகெல்லாம்சொல்லி அவர்மனது போலீஸாரடித்த அடிபட்டுக்கலங்கியிருந்த சமயத்தில் அவரைச்சம்மதிக்கச் செய்துவிட்டான்.போலீஸ் கொட்டடியில்தானே ஸப்மாஜிஸ்திரேட்டு நீலமேகசாஸ்திரிக்கு, புளுகுதண்ணி இராமண்ணா,போலீஸ் புலி மணவாளநாயுடு இவர்கள் முன்னிலையில் இராஜாம்பாளை துவிதீயமாக விவாகம் செய்துகொள்ளக் கொடுப்பதாக சாமிநாத சாஸ்திரிகள் வாக்குக்கொடுத்ததின்பேரில், அவருடைய விலங்குகள் உடனே நழுவி விழுந்துவிட்டன. சாமிநாத சாஸ்திரிகள்பேரில் வந்த குற்றச்சாட்டும் இருந்தவிடம் தெரியாது பறந்துபோய்விட்டது. சாமிநாத சாஸ்திரிகள் 80-லக்ஷ ரூபாய் ஆஸ்திவந்தராயிருந்து உலகெங்கும் புகழ யோக்கியனென்று பேரெடுத்திருந்தும், கேவலம் களவு குற்றத்தில் சம்பந்தப்பட்டவராக கால் விலங்கு கைவிலங்கு பூட்டப்பெற்றுப் போலீஸ் கொட்டடியில் அடியுண்ட கொடுமையிலும், அந்த சமயத்தில் ஏதோ புத்தி பிசகித்தமது உயிரினுக்குயிராய் மதித்து அவளுக்காகவே உயிர் வைத்திருந்த பெண்இரத்தினத்தை அந்தப்பாதகனுக்குக் கொடுப்பதாக வாக்குக் கொடுத்துவிட்டோமே. சத்தியவிரதம் தவறாமல்நமது பெண்மணியை யெப்படி காப்பாற்றுகிறது! என்கிற ஏக்கநிறைந்து முன்னிலும் பதின்மடங்கு அதிகமாய் துக்கசாகரத்தில் மூழ்கினவராய் வீடு போய்ச்சேர்ந்தார். அறிவில்லாப்பெண்டாம் அவித்தையைச் சேர்ந்து வாழ்ந்த விவேகவிற்பன்னரான சாமிநாத சாஸ்திரிகளுக்கு வந்த அநர்த்தபரம்பரைகள் இவ்வளவோ! இன்னமும் வரவிருப்பனவை நினைத்தால் அவைகளை வாசிக்க எனக்கும் மனந்திடுக்கிடுகிறதென்றால், சாமிநாத சாஸ்திரிகள் மனம் எப்படி உருகியிருக்குமோ! ஆனால் அதில் ஒரு ஆறுதல்: "உள்ளம் உருக உருகக் கள்ளங்கரையக் கரைய" என்று என்தாய் சொன்ன வார்த்தைகளால் மனம் உருகுவது முற்றும் வீணாகாது!

(இன்னும் வரும்.)

——:*:——

ஓம் ஸ்ரீமௌனராஜகுருப்யோநம:

# மிருகசீர்ஷன் கண்டகனவு

அல்லது

(சிறுவருக்கான கதை.)

(49-வது பக்கத்தொடர்ச்சி.)

V

அன்றிரவு மிருகசீர்ஷன் எப்போதும்போல் தூங்கினனென்று நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. தூங்கினாலும்சரி விழித்துக்கொண்டிருந்தாலும்சரி, அவன் தனக்குக்கிடைக்கப்போகிற அபூர்வசக்தியைப் பற்றியே யோசித்துக்கொண்டிருந்தான்.ஒரு குழந்தைக்கு நாளைக் காலையில் புதிதான ஒரு விளையாட்டு சாமான்தருகிறேன் என்று சொன்னபிறகு அதற்கு எப்போதுப்போல் தூக்கம்வருமா? சுக்கிரோதயமானவுடனேயே மிருகசீர்ஷன் தன் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கொண்டான். அந்த தேவதை சொன்னபடி தனக்குள் வர்ணஸ்பர்சமென்கிற சக்திவந்துவிட்டதா என்று பரீக்ஷித்துப் பார்க்கும்பொருட்டு பக்கத்திலிருந்த ஒரு நாற்காலியைத்தொட்டான். அது ஸ்வர்ணமாகமாறாமல் எப்போ

தும்போல் மரமாகவே யிருந்தது. மிருகசீர்ஷனுக்கு உடனே சந்தேகம் ஜனித்துவிட்டது. தான்கண்டதெல்லாம் கனவோ, அல்லது அந்த தேவதை தன்னை ஆசைகாட்டி ஏமாற்றவந்ததோ என்று நினைத்தான். விரலால் தொட்ட மாத்திரத்திலேயே பொன்னை உண்டாக்குகிறதை விட்டுப் பழையபடி எப்போதும்போல் ஒவ்வொரு பவுனைச் சேர்க்கிறதென்றால் எவ்வளவு கஷ்டமாயிருக்கும்?

இவன் இப்படி வருத்தபட்டுக்கொண்டிருக்கையிலேயே சூரியோதயமாகி ஒரு சூரியகிரணம் ஜன்னலின்சந்துவழியாய் புகுந்து சுவற்றின்மேல் பிரகாசித்தது. அந்த வெளிச்சத்தில் தன்படுக்கையின் உறையும் சகலாத்தும் ஓர் புது மாதிரியான பளபளப்புடன் விளங்கின. உற்றுப்பார்க்கையில் தன்போர்வைகளும் வஸ்திரங்களும் ஸ்வர்ணமயமாய் மாறியிருந்தன. தங்கக்கம்பிகளால் நெய்த வஸ்திரம்போல் நம்மிஷ்டப்படி வளைக்கவும் மடிக்கவும் கூடியதாயிருந்தது. சூரியோதயமானதும் தேவதை சொன்னபடி இவனுக்கு ஸ்வர்ணஸ்பர்சம் என்னும் சக்தி கிடைத்துவிட்டது.

மிருகசீர்ஷன் சந்தோஷம் பொறுக்கமாட்டாமல் படுக்கைவிட்டு எழுந்து அங்கும் இங்கும் ஓடினான். கட்டில் கால்களில் ஒன்றைத்தொட்டான். அது ஸ்வர்ணமயமான துவஜஸ்தம்பம்போலாகிவிட்டது. ஜன்னல் கதவை நன்றாய்த்திறந்தான்; அது இவன் தொட்டவுடன் தங்கக்கதவாகி எப்போதும் போல் சுலபமாய்த்திறக்க முடியாதபடி கனத்துக்கொண்டாகிவிட்டது. தன்மேல் போட்டிருந்தவஸ்திரங்களும் உடுப்புகளும் முன்னிலும் அதிகபளுவாகிவிட்டமையால் அவைகளைத் தூக்கிக்கொண்டு நடப்பது கொஞ்சம் சிரமமாகத்தானிருந்தது. ஸ்வர்ணலேகைபடிக்கிறபுஸ்தகம் ஒன்றுமேசைமேல் கிடந்தது. அதைக்கையிலெடுத்தான். உடனே அதன் ஓரங்களெல்லாம் முலாம் பூசினது போலாகிவிட்டது. தன் மகளுக்கு இனம் கொடுக்கிறதற்கு இம்மாதிரி புஸ்தகம் தான் வேண்டுமென்று நினைத்தான். ஆனால் அதைத் திறந்து அதன்பக்கங்களை விரலால் தடவினதும் அதில் அச்சிட்டிருந்த எழுத்துகளும் சித்திரங்களும் மறைந்துபோய், "தங்கரேக்" என்று சொல்லபட்ட ஸ்வர்ணத்தகடுகளாய் விட்டன. தன் சட்டைப்பையிலிருந்து கைக்குட்டையை எடுத்தான். அது வெண் பட்டினால் நெய்யபட்டதாயும், ஸ்வர்ணலேகையின் கையால் பலவர்ண நூல்களைக்கொண்டு பலவிதசித்திரவேலை செய்யப்பெற்றதாயுமிருந்தது. அதை எடுத்து முகத்தைத்துடைத்துக்கொண்டான் உடனே அதிலிருந்த சித்திரங்களெல்லாம் மறைந்துபோய் இரண்டு இழையும் சரிகையினால் நெய்யப்பட்டது போலாகிவிட்டது. ஆனால் இந்தக்கைகுட்டை தங்கமாகமாறினது மட்டும் மிருகசீர்ஷனுக்கு முற்றிலும் சம்மதமாயிருக்கவில்லை. அதில் தன் மகள் செய்திருந்த வேலைப்பாடெல்லாம் வீணாய்ப்போயிற்றே என்று வருத்தமடைந்தான். இருந்தாலும் இந்த அற்பவிஷயத்துக்காக வருத்தமடைவது எவ்வளவு முட்டாள்தனம் என்று தன்னைத்தானே தேற்றிக்கொண்டான். தன் திருவிளையாடல்களை நன்றாய்ப்பார்த்து ஆநந்திக்கும் பொருட்டு, மூக்குக் கண்ணாடிகளை எடுத்து நன்றாய்த்துடைத்துப் போட்டுக்கொண்டான். அந்த நாள்களிலெல்லாம் நம்மைப்போலொத்த சாமானிய ஜனங்களுக்கு மூக்குக்கண்ணாடி ஏற்படாவிட்டாலும் ராஜாக்களுக்கு மட்டும் ஏற்பட்டிருந்தது, இல்லவிட்டால் மிருகசீர்ஷனுக்கு மட்டும் எப்படி கிடைத்திருக்கக்கூடும்? மூக்குக்கண்ணாடிகள் முதல்தரமான ஸ்படிகக்கல்லில் வேலை செய்யபட்டிருந்தபோதிலும், கொஞ்சம் வெள்ளெழுத்தாகவிருந்த இவன்பார்வையை முற்றிலும் மறைத்தன. ஏனெனில் ஸ்படிகமெல்லாம் தங்கமாகமாறிவிட்டது. தான் எவ்வளவு செல்வத்தில்வாழ்ந்தபோதிலும் இனி தனக்குபயோகப்படும்படியான மூக்குக் கண்ணாடிகள் போட்டுக்கொண்டு பார்க்கயோக்கியதை யில்லாமற்போயிற்றே என்று கொஞ்சம் வருத்தம்தான். இருந்தாலும் பின்வருமாறு தன்னைத்தானே தேற்றிக்கொண்டான்:—

"உலகத்தில் கொஞ்சம் கஷ்டப்படாமல் யாதொருபெரிய நன்மையும் கிடைக்காது. ஸ்வர்ணஸ்பர்சசக்திக்காக ஒரு மூக்குக்கண்ணாடியை இழக்கக்கூடாதா? கண்களைவேண்டுமானாலும் கொடுக்கலாமே! சாதாரண்விஷ

யங்களுக்கு என்பார்வைபோதும். ஏதாவது எழுதப்படிக்க வேண்டியிருந்தால் அதற்கு ஸ்வர்ணலேகை இருக்கிறாள், பார்த்துக்கொள்வோம்" என்று தனக்குள்ளேயே சமாதானப்படுத்திக்கொண்டான்.

மகா புத்திசாலியான மிருகசீர்ஷ மகாராஜா அவர்கள் தம்முடைய சந்தோஷத்தை அடக்கமாட்டாமல் படுக்கைஉள் மாடியிலிருந்து கீழ இறங்கி உத்தியானத்துக்குப்போக வந்தார். போகும்பொழுதே படிக்கட்டின் கைபிடிக்கட்டையைத்தடவிக்கொண்டு 'தினமேசுதினமு' என்றுபாடிக்கொண்டேபோனார். கட்டைமுழுவதும் தங்கப்பாளமாகமாறிவிட்டது. தோட்டத்திற்குள் நுழைந்தான். அங்கே மலர்ந்ததும் மலராததும் பூவும் மொட்டுமாக அநேகரோஜா புஷ்பங்கள் புஷ்பித்திருந்தன. காலைவேளையில் அவைகளெல்லாம் பனித்துளி சொட்டிக்கொண்டு 'கம்' என்றுவாசனைவீசிக்கொண்டிருந்தன. முன்னெல்லாம் தன்மகளிடத்தில் "இந்தபுஷ்பங்களெல்லாம் தங்கஇதழ்களோடு கூடியவையாயிருந்தாலும் பிரயோசனமுண்டு" என்று தான்சொல்லிக்கொண்டிருந்தது ஞாபகத்துக்குக்கு வந்தது. உடனேதோட்டம் முழுவதும் சுற்றிக்கொண்டு ஒருசெடிதவறாமல் எல்லா புஷ்பங்களையும் தொட்டுக்கொண்டேபோனான். சில புஷ்பங்களின் அடிக்காம்புகளில் குடியிருந்த புழுக்கள் கூட தங்கமயமாய் மாறிவிட்டன.

சற்றுநேரத்துக்கெல்லாம் ஒரு சேவகன் வந்து "மகாராஜ் காப்பி சாப்பிட த்தயாராயிருக்கிறது" என்று தெரிவித்தான். இவனுக்கும் தோட்டம் முழுவதும் அலைந்ததினால் நல்ல பசியுண்டாகியிருந்தது வெகுவேகமாய்க் காலை போஜனத்துக்குத் திரும்பினான். போகும்பொழுதே "இன்றையதினம் இந்த ப்பூந்தோட்டத்தை மட்டும் விற்றாலும் என் மிகுதி ராஜ்யத்தை வாங்கிவிடலாம்" என்று சந்தோஷப்பட்டுக்கொண்டே போனான்.

அந்த நாட்களில் ராஜாக்கள் காலைவேளையில் என்ன சாப்பிடுவது வழக்கமோ எனக்குத்தெரியாது; ஆனால் இப்பொழுது சொல்லிக்கொண்டுவருகிற தினத்தில் சுடச்சுட ரவைத்தோசையும், வாதம் பருப்பு ஹல்வாவும், ஜவ்வரிசி பாயஸமும், ரொட்டியும், காபியும், வாழைப்பழத்தில் நாலைந்து தினிசும் மிருகசீர்ஷனுக்கு சாப்பிட வைக்கப்பட்டிருந்தது. குழந்தை ஸ்வர்ணலேகைக்குத் தனியாக ஒரு தட்டில் லட்டும், தோசையும், ரொட்டியும், ஒரு கிண்ணத்தில் பாலும் வைக்கப்பட்டிருந்தது. அவளுக்குமட்டும் மிருகசீர்ஷன் காபிகொடுத்துப் பழக்கவில்லை. கதையிற்சொல்லியிருக்கிறது உண்மையோ இல்லையோ, இதற்கு மேலான ராஜபோஜனம் என்ன இருக்கக் கூடுமென்று எனக்குத் தெரியவில்லை.

மிருகசீர்ஷன் சாப்பாட்டு மேஜையில் உட்கார்ந்தான். ஸ்வர்ணலேகை இன்னும் வராமலிருந்தமையால் அவளை அழைத்துவர ஒரு சேவகனை அனுப்பிவிட்டு அவள் வந்து சேருகிறவரையில் காத்துக்கொண்டிருந்தான். உண்மையாகவே மிருகசீர்ஷன் தன் மகளிடத்தில் மிகப்பிரீதி வைத்திருந்தான். இன்றையதினம் விசேஷமாக ஓர் அபூர்வ பாக்கியம் கிடைத்தமையால் தன் மகளிடத்திலிருந்த பிரீதி இன்னும் அதிகரித்து, சற்று நேரத்துக்கெல்லாம் ஸ்வர்ணலேகை அழுதுகொண்டே வருகிற சப்தம்கேட்டது. இது மிருகசீர்ஷனுக்கு ஆச்சரியமாயிருந்தது. ஏனெனில் ஸ்வர்ணலேகை எப்பொழுதும் ஸந்தோஷமாய் விளையாடிக்கொண்டிருக்கப்பட்ட பெண். வருஷத்தில் பத்து சொட்டு கண்ணீர் கூடப் பெருக்கமாட்டாள். அவள் அழுதுகொண்டுவருவதைக்கேட்ட மிருகசீர்ஷன் அவளை சந்தோஷப்படுத்த எண்ணி, அவள் வந்தவுடன் பார்த்து ஆச்சிரியப்படுவாளென்று நினைத்து அவளுடைய சாப்பாடு வைத்திருந்த பீங்கான் தட்டைக் கையை நீட்டித் தொட்டு வைத்தான். அது உடனே முழுவதும் தங்கமாகமாறி விட்டது. அந்தத்தட்டின்மேல் எழுதப்பட்டிருந்த சித்திரங்களெல்லாம் அழிந்து போய்விட்டன.

இதற்குள்ளாகக் கதவைத் திறந்துகொண்டு ஸ்வர்ணலேகையும் வந்து சேர்ந்தாள். வரும்பொழுதே முந்தானையால் கண்ணைக்கசக்கிக்கொண்டு விம்மிக்கொண்டே வந்தாள். அவளைப் பார்த்து மிருகசீர்ஷன் "என்ன கு

ழுந்தாய்? ஏன் அழுகிருய்? இக்காலேவேளே இவ்வளவு பிரகாசமாயிருக்க நீயும் அதைப் போலிருக்கவேண்டாமா?'' என்ருன்.

ஸ்வர்ணலேகை கண்ணிலிருந்த துணியை எடுக்காமலே தன் கையில் வைத்திருந்த தங்கமாகமாற்றப்பட்ட ரோஜாப்பூ வொன்றைக்காண்பித்தாள்.

மிருகசீர்ஷன் "வெகு அழகாயிருக்கிறதே இப்பேர்ப்பட்ட தங்க புஷ்பத்தைக் கண்டு அழுவானேன்?'' என்ருன்.

"இது கொஞ்சங் கூட அழகாகவேயில்லேயப்பா, இந்தப்பூ எனக்குப் பிடிக்கவேயில்லே. காலேயில் எழுந்திருந்து ரோஜாப்பூப் பறித்து உங்களுக்குகொடுக்க வேண்டுமென்று தோட்டத்துக்குள்போனேன். அங்கே என்னநடந்திருகிறது தெரியுமா? பார்த்தால் வயிற்றெரிச்சலாயிருக்கிறது! இவ்வளவு விகாரமாகக்கூட ரோஜாப்பூ இருக்குமா என்று ஆச்சரியப்பட்டேன்! எனக்கு அழுகை அழுகையாய் வருகிறது! எல்லாரோஜாப்பூவும் மஞ்சள் மஞ்சளாக, ஒருவாசனேயுமில்லாமல் கத்திபோல் குத்துகிறது. இவைகளுக்கென்ன கஷ்டகாலம் வந்ததோ தெரியவில்லே'' என்று தேம்பி அழுதாள்.

மிருகசீர்ஷன் "அடா, பைத்தியமே, இதற்காக அழுவார்களா? போனல் போகிறது, உட்கார்ந்து சாப்பிடு!' என்ருன். நான் தான் இந்தப் புஷ்பங்களேயெல்லாம் இப்படி மாற்றிவிட்டேன் என்று சொல்லிக்கொள்ள அவனுக்கே வெட்கமாயிருந்தது. தான் வெகு பெருமையாக நினேத்துச்செய்த காரியத்தைக்கண்டு தன் மகள் சந்தோஷப்படவில்லே என்று அவனுக்கு வருத்தம். "நூறு வருஷமானுலும் வாடிப்போகாத இந்தத் தங்கப் புஷ்பத்தில் ஒன்றைக்கொடுத்தால் ஒரு தினத்துக்குள் வாடிப்போகிற சாதாரண புஷ்பங்களில் ஆயிரம் வேண்டுமானுலும் வாங்கிக் கொள்ளலாமே! நீ ஏன் வருத்தப்படுகிருய்.'' என்ருன்.

"எனக்கு இனமாகக் கொடுத்தால் கூட இந்த மாதிரி ரோஜாப்பூ வேண்டாம். அதில் ஒரு வாசனேயுமில்லே. மோந்து பார்த்தால் மூக்கைக் குத்துகிறது.'' என்ருள்.

சாப்பிட உட்கார்ந்த பிறகுகூட ஸ்வர்ணலேகை ரோஜாப்பூக்களுக்கு நேர்ந்த விபத்துக்காக வருத்தப்பட்டுக்கொண்டிருந்ததிஞல் தன் பீங்கான் தட்டு மாறி இருப்பதைக் கவனிக்கவில்லே. அதுவும் ஒரு காரியத்துக்கு நல்லதென்று நினேக்கவேண்டியிருந்தது. ஏனெனில் சாதாரணமாக ஸ்வர்ணலேகை பீங்கான் தட்டுகளிலும் கிண்ணங்களிலும் எழுதப்பட்டிருக்கும் சித்திரங்களேக்கண்டு சந்தோஷப்படுவது வழக்கம். இன்றைக்கு அவளுடைய பீங்கான் தட்டு தங்கத்தட்டாகமாற்றப்பட்டு அதன்சித்திரங்கள் அழிந்து போயிருப்பதைக் கவனித்தால் இன்னும் அதிகமாக அழ ஆரம்பித்து விடுவாள்.

இதற்குள் மிருகசீர்ஷன் ஒரு கிண்ணம் காபி எடுத்து ஆற்றிஞன். கிண்ணம் சாதாரணபீங்கான் கிண்ணமாயிருந்த போதிலும் இவன்தொட்ட உடனே தங்கமாக மாறிவிட்டது. யாதொரு டம்பமும் செய்து கொள்ளுகிற வழக்கமில்லாத தான் இன்றையதினம் தங்கக்கிண்ணத்தில் காபி சாப்பிடுவது அவ்வளவு உசிதமாகத் தோற்றவில்லே. பாத்திரங்களெல்லாம் தங்கமாகிவிட்டால் அவைகளே வேலேக்காரர்கள் திருடிக்கொள்ளாமல் காப்பாற்ற வேண்டுமே என்று கவலேயுண்டாகிவிட்டது. இப்படி யோசித்துக் கொண்டே ஒரு கரண்டி காப்பியை எடுத்து சாப்பிடுவதற்காக உதட்டில் வைத்தான் உடனே கரண்டி காப்பியும் உருகி வார்த்த தங்கமாக மாறி அடுத்த நிமிஷத்தில் கட்டியாக உறைந்து போயிற்று.

"ஐயையோ!'' என்று மிருகசீர்ஷன் திகிலடைந்தான்.

"என்ன அப்பா?'' என்று ஸ்வர்ணலேகை கண்ணும் கண்ணீருமாகவே கேட்டாள்.

"ஒன்றுமில்லேயம்மா, உனக்கொன்றுமில்லே பால் ஆறிப்போவதக்கு முன் சாப்பிடு'' என்ருன்.

வாழைப்பழத்தை யாவது சாப்பிட்டுப் பார்ப்போமென்று ஒரு பழத்தை உரிப்பதற்காக ஒரு சீப்பை எடுத்தான். அந்த சீப்பு முழுவதும் நவராத்திரிக்கொலுவுக்கு வைக்கக்கூடிய அலங்கார சாமானுக மாறிவிட்டது.

ஆனால் நவராத்திரி வரும்வரையில் தான் உயிரோடிருப்பது தான் சந்தேகத்தில் வந்துவிட்டது. "இன்றைக்கு எனக்கு சாப்பாடு எப்படி கிடைக்க போகிறதென்றுதான் ஏற்படவில்லை." என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டான்.

இன்னொருவாழைப்பழத்தைக் கத்தியினால் நறுக்கிக்கத்தியினாலேயே உரித்துக்கத்தியினாலேயே குத்தி வாய்க்குள் போட்டுக் கொண்டான். நாக்கில் பட்டதும் அது கனத்துக்கொண்டு கடிக்கமுடியாத கடினமாகிவிட்டது. விழுங்கினால் தொண்டையில் சிக்கிக்கொண்டு சாகவேண்டியதுதான் கண்ணை மூடிக்கொண்டு வெகு சீக்கிரமாக விழுங்கி விடுவோமென்று ஒரு கிண்ணம் பாயஸத்தை வெகு வேகமாய் ஒரேமட்டாய் வாய்க்குள் கவிழ்த்துக்கொண்டான். ஜவ்வரிசி வழுவழுப்பாயியிருக்குமாதலால் வழுக்கிக்கொண்டு சீக்கிரம் உள்ளே சென்று விடுமென்று நினைத்தான். ஆனால் ஸ்வர்ணஸ்பர்ச சக்தி எல்லாவற்றையும்விட வேகமாய் வந்து இவனைப்பிடித்துக் கொண்டது. வாய்முழுவதும் துப்பாக்கி ரவையைப்போட்டுக் கொண்டாற்போல் உருண்டை உருண்டையாய் நிறைந்துவிட்டது.

தண்ணீர் பால் இவைகளைக் காட்டிலும் கனமானபதார்த்த மாதலால், ஜவ்வரிசி பாயஸம் உஷ்ணத்தை வெளி விடாமல் அந்தரங்கமாகவே வெகு நேரம் வைத்துக் கொண்டிருக்கும். மிருகசீர்ஷன் அவ்வளவு பாயஸத்தையும் ஒரேவாயாகச் சாப்பிட்டவேகத்தில் அது தங்கமாகமாறினது போதாமல் நாக்கையும் சுட்டுவிட்டது.

சுடுகையொருபக்கம், பயமொருபக்கம், பசியொருபக்கமாக மிருகசீர்ஷன் நாற்காலியிலிருந்துஅலறிக்கொண்டு துள்ளிகுதித்தான்.

ஸ்வர்ணலேகை "என்ன அப்பா, நாக்கில் சுட்டுவிட்டதா? என்ன? இன்றைக்கென்ன கஷ்டகாலமோ தெரியவில்லை. உங்களுக்கு இப்பொழுது உடம்பு என்ன செய்கிறது?" என்றாள்.

"உன்னப்பாவுக்கு என்னவோ பிராணபத்து வந்திருக்கிறது! எல்லாம் தங்கமான சாப்பாடாயிருக்கிறது, ஒன்றையும் சாப்பிட முடியவில்லையே." என்று சொல்லி வயிறு நிறைய சாப்பிட்டு விட்டு உட்கார்ந்திருக்கும் ஸ்வர்ணலேகையைப் பார்த்துப் பொறுமையடைந்தான்.

ஸ்வர்ணலேகை தன் தகப்பனுருக்கு உடம்பு என்னவோ என்று நினைத்துக்கொஞ்ச நேரம் அவன் முகத்தை உற்றுப்பார்த்தாள். பிறகு ஒன்றுந்தோன்றாமல் எழுந்திருந்து தன்தகப்பனருண்டையிற்போய் அவன் காலைக் கட்டிக்கொண்டு முகத்தை அண்ணாந்து பார்த்தாள். அவனும் குனிந்து "என்கண்ணே, பயப்படாதே" என்று அவளுக்கொரு முத்தம் கொடுத்து அவளை வாரி அணைத்தான்.

ஸ்வர்ணலேகைக்கு அப்புறம் பேச்சு மூச்சில்லை.

(இன்னும்வரும்.)

——:o:——

# *அவிழ்த்து விட்டகழுதை.

(தொடர்ச்சி)

2. பாலியம் (தொடர்ச்சி.)

——:o:——

இக்காலத்தில் தான் என்னுடன் பிறந்த இன்னொரு சக்தி வெளிப்பட ஆரம்பித்தது. அது என்னவெனில் சித்திரங்கள் வரையும் சக்திதான். என் தாய்தந்தையரும் உபாத்தியாயரும் நெசவுகாரனுமாகச்சேர்ந்து என்னைச் செய்திருப்பதைத் தவிரக் கடவுளாக என்னைச்செய்தது சித்திரவேலைக்காரனுகத்தான்.

ஒரு தடவை நான் கிராமத்திற்கு வந்திருந்தபொழுது என் தகப்பனரிடத்தில் ஸம்ஸ்கிருத பாடம் படித்துக்கொண்டிருந்த ஒரு பையன் என் கற்பலகையில் சுண்ணாம்புக்கட்டியினால் பசுவின் தலைபோல் ஒரு உருவம் வரைந்துகொடுத்தான். அதை அவன் வரையும்பொழுது நான் பார்த்துக் கொண்டேயிருந்தேன். அவன் அலக்ஷியமாய்

* தன்னையறிந்து தன் தொழிலில் பிரவேசிக்கும் மனோதர்மசக்தி தடைபடுகிறியாது.

இரண்டு மூன்று கோடுகள் இப்படியும் அப்படியுமாய் இழுக்க அது கடைசியில் ஒரு பசுவின் உருவமாக மாறுவதைக்கண்ட எனக்கு அம்மாதிரி சக்தியை எப்படியாவது நாமும் அடையவேண்டும் என்கிற பேரவா உண்டாயிற்று. பசுத்தலைபோல் வரையத் தெரிந்துவிட்டால் என் பசி தீர்ந்துவிடும்போலிருந்தது. அப்புறம் எனக்கு உலகத்தில் ஒன்றுமே லக்ஷியமில்லை என்றுதோன்றிற்று. பசுவின் முகம் எவ்வளவு அழகாயிருக்கிறதென்று அன்றுதான் தெரிந்தது. தினம் முழுதும் பசுக்களையே வரைந்துகொண்டிருந்தாலும் அலுக்காதென்று நினைத்தேன். எனக்கு எழுதிக்கொடுத்த அந்தப் பையன் முகத்திலும் அதை எழுதும்பொழுது ஒருவித உத்ஸாகமும் பெருமையும் நிறைந்திருந்தது. அவனேபாக்கியசாலி என்று எண்ணினேன். அந்தக் கற்பலகையை அப்படியேஎடுத்துகொண்டு தனிமையிற்போய் நானும் பசுத்தலைவரைய ஆரம்பித்தேன். அன்று முதல் எங்கே எந்தச்சித்திரத்தைக் கண்டாலும் அதைச் சற்றுநேரம் நின்று உற்றுப்பாராமல் போகமாட்டேன். கோபுரங்களிலும் கோவில்களிலும், கடைகளிலும், புஸ்தகங்களிலும் உபயோகமற்ற கிழிந்த காகிதங்களிலும் சித்திரங்களைக்கண்டால் விடமாட்டேன். இதனால் என்னுடன் பிரயாணம் புறப்படுபவர்களுக்கு வெகுதாமதமாகிவிடும். இதையறிந்தவர்கள் சற்று அவசரமாய் போய் வரவேண்டிய விஷயங்களுக்கு என்னை அனுப்பவும் மாட்டார்கள். அழைத்துக்கொண்டும் போகமாட்டார்கள். எனக்கு எங்கேயாவது போகவேண்டுமானால் தனிமையாய்ப் போவதிலேயே விசேஷதிருப்தி.

அன்று முதல் ஒரு மாதம்வரையில் பசுத்தலை மட்டும் எழுதிப்பழகி வந்தேன். அப்புறம் உடல் கால் கைகளெல்லாம் எழுத ஆரம்பித்தேன். எனக்கு எங்கேயாவது சந்தேகமுண்டானால் மட்டுமே எனக்குக் கற்றுக்கொடுத்த பையனைப் போய்க்கேட்பேன். இப்படியாக ஒரு வருஷத்தில் பசுமாடும் காளைமாடும் வரையக்கற்றுக் கொண்டேன். அப்புறம்ஆடு, நாய், குதிரை, யானை, பூனை, கிளி, காக்கை எல்லாம் ஒவ்வொன்றாய்க் கிளம்பி வந்தன. ஒருமிருகத்தின் உருவத்தைச் செவ்வையாய்க்கற்றுக்கொண்டு விட்ட பிறகு மற்ற மிருகங்களெல்லாம் சுலபமாகவே வந்துவிட்டன. கடைசியில்தான் மனிதன் உருவம் எழுதத் துணிந்தேன். மிருகங்களைப்போல் அவ்வளவு சுலபமாக மனிதனைப் பிடிக்க முடியவில்லை, இருந்தாலும் நாலைந்து வருஷத்தில் எல்லா உருவமும் எழுதக்கூடிய சக்தி வந்துவிட்டது. பள்ளிக்கூடத்தில் வாத்தியார் பாடம் சொல்லுவது ஸ்வாரஸ்யமில்லாவிட்டால் புஸ்தகத்தை சிரத்தையாய் கவனிப்பவன் போல் குனிந்த தலை நிமராமல் சித்திரம் எழுதுவேன். கண்டு பிடிக்கப்பட்டு அநேகதடவைகளில் அடியும் வாங்கியிருக்கிறேன். ஆனால் அந்த அடிகளெல்லாம் வலித்ததேயில்லை. ஏனெனில் அடிவிழுகையில் என் ஞாபகமெல்லாம் அப்பொழுது எழுதிக்கொண்டிருந்த சித்திரத்திலிருக்கும்.

இந்தச் சித்திரம் எழுதும்பைத்தியத்தினால் நான் எவ்வளவோ கஷ்டப்பட்டுவிட்டேன். எந்தக் கடையிலாவது நல்ல படங்களிருந்தால் அவற்றை உற்றுப்பார்த்துக்கொண்டு சும்மா நிற்க சங்கோசப்பட்டுக்கொண்டு, அந்தக் கடையில் ஒரு பைசாவுக்கு ஊசி நூல் கண்டு, அல்லது காகிதம் பேனா வாங்கிக்கொண்டு நிற்பேன். கடைக்காரன் ஊசிக்கு பதிலாக சப்பாத்து முள்ளைக்கொடுத்தாலும் கண்டு பிடித்திருக்க மாட்டேன். அதற்கும் கையில் காசில்லாவிட்டால் அந்தக் கடையில் அகப்படாத சாமான்களை விலைக்கு கேட்பேன். பலசரக்கு கடையில் புஸ்தகங்கள் வேண்டுமென்பேன், புஸ்தகக்கடையில் மிட்டாய் வேண்டுமென்பேன், மிட்டாய் கடையில் உப்பு வேண்டுமென்பேன், அல்லது எல்லா சாமான்களையும் ஒருவன் விற்றால் அவனிடத்தில் அசுவாண்டாம் (குதிரை முட்டை) அல்லது சசவிஷாணம் (முயற்கொம்பு) இருக்கிறதா என்று கேட்பேன். அவனும் இவை மருந்துச் சரக்கென்று நினைத்துக்கொண்டு மருந்துக்கடையில் கேட்கச் சொல்லுவான். புஸ்தகம் வாங்குவதற்காகக் கொடுக்கப்பட்ட பணத்தைக்கொண்டு வர்ணங்கள் வாங்கிவிடுவேன். அப்புறம் அயல் பிள்ளைகளுடைய புஸ்தகத்தைப் பார்த்துப் படிக்க யாசகம் கேட்பேன். எனக்குக் கணக்குப் பார்க்கத் தெரியாதென்று முன்னமே

யே சொல்லியிருக்கிறேன். எனக்குப் பார்க்கத்தெரியாத கணக்குகளெல்லாம் என் கற்பலகையில் சித்திரங்களாகவே முடியும்.

கொஞ்சநாள் கழித்து சித்திரங்களை உற்றுப்பார்த்துக் கற்றுக்கொள்வதைக் காட்டிலும் உலகத்திலுள்ள பிராணிகளையும் பொருள்களையுமே நேராக உற்றுப்பார்த்தால் இன்னும் நன்றாய்க்கற்றுக் கொள்ளலாமென்று ஏற்பட்டது. இதற்காகவே தெருவில் போகும் பொழுதெல்லாம் நான் தாமதமாகவேபோவேன். தெருவில் போகும் வண்டி, குதிரை, மாடு, ஸ்திரீ, புருஷன், பையன் எல்லாரையும் கவனித்துக்கொண்டே போவேன். ஆனால் அவர்கள் என்னைப் பார்க்கும்படி திரும்பினால் நான் அவர்களைக் கவனியாததுபோல் போய்விடுவேன். ஏதாவது ஒரு முகம் விசேஷஅழகாகத்தோன்றினால் அதையே கவனித்துக்கொண்டு நின்றுவிடுவேன். உலகத்தில் அழகாக சிருஷ்டிக்கப்பட்டிருக்கும் பொருள்களெல்லாம் எனக்காகத்தான் என்று தோன்றுகிறது. எப்படியிருந்தபோதிலும்அவைகளிடத்தில்எனக்குள்ள ஸ்வாதந்திரியத்தை யாரும் பிடுங்கிக் கொள்ள முடியாது. எனக்கு யாராவது சித்திரம் எழுதக்கற்றுக் கொடுத்திருந்தால் தினம் முழுதும் சளைக்காமல் கற்றுக்கொண்டிருப்பேன்.

அதிகமாக விஸ்தரிப்பானேன்? பாம்பின் கால் பாம்புக்கே தெரியுமென்பதுபோல் சித்திரம் எழுதுவதிலுள்ள ஆனந்தம் சித்திரக்காரர்களுக்கே தெரியும். உலகத்தில் ஆனந்தம் என்னும் வஸ்துவைக் கலப்பமில்லாமல் அதன் மாற்றுக் குறையாமல் அதன் தெளிவு கலங்காமல், கொம்பில் பழுத்த பழத்தை அணிப்பிள்ளைபோல் அதன் உற்பத்தி ஸ்தானத்திலேயே அனுபவிப்பவர்கள்மூன்றேபேர். அவர் யாரெனில் மனோதர்மசத்தியை அடக்கி ஆண்டு உபயோகிப்பவர்களாகிய கவிகள், சங்கீத சாஸ்திரிகள், சிற்பவேலைக்காரர்கள். அவர்களில் நானும் எப்படியோ கடைசிவகுப்பில் கடைசித்திரத்திலாவது சேர்ந்து விட்டேன் என்பதை நினைத்தாலே ஒரு ஆனந்தம் உண்டாகிறது.இந்தப்பதவியையடைய நான் முன் ஜன்மத்தில என்ன பாக்கியம் செய்திருந்தேனோ என்று தோன்றுகிறது.

இதனால் சொல்லவந்ததென்னவெனில் பிள்ளைகளை அவர்கள் மனம் செல்லாத வழிகளில் போட்டுக் கட்டியிழுக்காமல் இயற்கையாய் அவர்களிடத்தில் அமைந்திருக்கும் சக்தி இன்னதென்று நுட்ப யுக்தியாலறிந்து அதை விருத்திசெய்து அதை உபயோகத்துக்குக் கொண்டு வரும்படி செய்ய வேண்டியதே பெற்றோர்களுக்கும் உபாத்தியாயர்களுக்கும் பெருங்கடமை என்பதுதான். அதற்காகப் பொதுவாக எல்லாருக்கும் தெரிந்திருக்க வேண்டிய கணக்கு வழக்குகள் எழுதப்படித்தல் இதெல்லாம் தெரிந்து கொள்ளாமல் விட்டுவிடவேண்டுமென்றுசொல்லவில்லை, எவ்வளவுக் கெவ்வளவு இதர விஷயங்களைப் பற்றி அதிகமாகத் தெரிந்துகொள்ளுகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நம்முடைய சொந்தவிஷயத்தில் ஞானம் அதிகரிக்கும். சொந்த விஷயத்தில் ஞானம் அதிகரிக்குமளவுக்கு இதர விஷயங்களிலும் அதிகரிக்கும். ஏனெனில் வித்தை என்பது ஒன்றே ஒழிய பலவல்ல. ஒரு பந்து நூலில் ஒரு முனையைப் பிடித்திழுத்தால் எல்லா நூலும் உருண்டு வருவதுபோல், ஒருவிஷயத்தைச் செவ்வையாய் தெரிந்து கொள்ள முயற்சித்தால் எல்லா விஷயங்களும் கொஞ்சம் கொஞ்சமாய்ப் புலப்பட ஆரம்பிக்கும். அப்படியே ஒரு விஷயத்தை செவ்வையாய் தெரிந்துக்கொள்ள ஆரம்பிக்குமுன் அதற்கு அஸ்திவாரமாகப் பலவிஷயங்களிலும் கொஞ்சம் கொஞ்சம் தெரிந்திருக்கவேண்டும். ஆனால் மனித ஆயுசுக்குள் ஏதாவது ஒரு விஷயததைக் கசடறக்கற்றுக்கொள்வதற்கே பொழுதுபோதும் போதாததுமாக இருக்கிறபடியால் அதிக ஆசைப்பட்டு எல்லாவற்றையும் கைநிறைய வாரிக்கொண்டு கடைசியில் கையிலிருப்பதையும் இழந்து விடாமல் நமக்கு சமீபத்திலிருப்பது எது, நமக்கு சுலபமாய்க் கிடைக்கக்கூடியது எது வென்று தெரிந்துகொண்டு நமக்குக் கிட்டாத விஷயங்களில் நம்முயற்சிகளை விருதாவாகச் செலவழிக்காமல்,நம்மை மனோதர்மசத்தியழைத்துப் போகிற வழிகளில் சென்றால் உலகத்திலுள்ள கஷ்டங்களில் பாதிக்குமேல் நீங்கிவிடும். முக்கியமாய்ப் பிள்ளைகளைப் படிப்பிப்பதில் பரீக்ஷை என்பதை அடியோடே எடுத்துவிடவேண்டும். பரீக்ஷைக்குப் படிப்பது நிர்ப்பந்தம். நிர்ப்பந்தத்தி

னால் செய்கிறவேலை அரைக்காசுக்குதவாது. நிர்ப்பந்தப்படுத்தாவிட்டால் பிள்ளைகள் தானாகப் படிப்பார்களா என்றுகேட்டால், அவர்கள் படிக்கவேண்டாம், அவர்கள் தானாக ஒரு விஷயத்தை தெரிந்துகொள்ள வேண்டுமென்கிற ஆவலுடன் கேட்கும் பொழுது நாம் சொல்லிக்கொடுக்கத் தயாராயிருந்தாற் போதும்; அது முடியாவிட்டால், நாம் கற்பிக்கப் புகும் விஷயத்தில் அவர்களுக்கு ஒரு ஆவலை உண்டுபண்ணவேண்டும்; நோயாளிக்குப் பசியை உண்டுபண்ணிவிட்டல்லவோ ஆகாரத்தைக்கொடுக்கவேண்டும்? பரீக்ஷிக்காவிட்டால் ஒருவனுடைய யோக்கியதை எப்படித்தெரியுமென்றால் அவனோடு வருஷம் முழுவதும் பழகின உபாத்தியாயருக்கு அந்த ஒரு வருஷத்தில் தெரியாத யோக்கியதை ஒருநாள் பரீக்ஷையில்தானா தெரிந்துவிடப்போகிறது?

எடுத்தவிஷயத்திற்கே திரும்புவோம். இந்தச் சித்திரவேலையினா லுண்டாகும் நன்மைகளைச் சற்று விசாரிப்போம். முதலாவது எதையும் ஊன்றி உற்றுப்பார்த்து முற்றிலும் கிரஹித்துக்கொள்ளும் வழக்கமும் சக்தியும் கண்ணுக்கு அப்பியாசமாகிவிடுகிறது. புறக்கண்ணுக்குள்ளபடியே அகக்கண்ணுக்கும் அகப்பொருள்களைத் தீர்க்காலோசனையினால் ஆய்ந்தரியும் சக்தி உண்டாகிறது. இரண்டாவது பார்த்ததை உள்ளது உள்ளபடி, எழுத்தும் எண்ணும் செயல் மூலமாக வெளிப்படுத்துதல் என்னும் சத்திய விரத முண்டாகிறது. இதுவே தான் தானமுமாகிறது. ஏனெனில் தான் சிரமப்பட்டு கிரஹித்ததை அப்படியே பிறரும் கிறஹிக்கும்படி சிரமப்பட்டு சிரத்தையுடன் கொடுக்கவேண்டியிருக்கிறது. கர்மேந்திரியங்களில் ஒன்றாகிய கைக்குக்கிடைத்த நிதான சக்தி இன்னொன்றாகிய நாவிற்கும் பரவுகிறது. அதாவது கண்கண்டதைக்கை எப்படி ஏறாமல் குறையாமல் ஒளிக்காமல் செய்துகாட்டுகிறதோ அப்படியே நாவும் உள்ளதை ஏறாமல் குறையாமல் ஒளிக்காமல் சத்தியத்தையே சொல்லப்பழகிவிடுகிறது. மூன்றாவது, கேவலம் உபயோகமற்றதென்று தோன்றக்கூடிய பூச்சி புழு, புல் பூண்டைக்கூட அலக்ஷியம் செய்யாமல் அதன் தோற்றத்தையும் நடவடிக்கைகளையும்கவனித்துப்பார்த்து அதனதன் அழகு வெளிப்படும்படி வரைதற்கு வேண்டிய ஜீவகாருண்ய மென்னும் அனுதாபமுண்டாகிறது. சிற்பசாஸ்திரியாயிருப்பவன் எல்லா வஸ்துக்களையும் தெய்வீகமாக பாவித்துப் பூஜிக்கவேண்டும்.

நான்காவது, இதற்கெல்லாம் வேண்டிய முதலஸ்திபாரமாகிய பொறுமை உண்டாகிறது. சித்திரவேலைக்காரர்களுக்குக் கோபமே வராது. அவர்களுடைய பொறுமைக்குசமானமாகச் சொல்லக்கூடியது கழுதையின் பொறுமை தான். அதனால் தான் இந்த சரித்திரத்துக்கு "அவித்துவிட்ட கழுதை" என்று பெயரிட்டேன். சித்திரவேலை செய்துக் கொண்டிருக்கும் பொழுது அதற்கு இடையூறுண்டானால் மட்டுமே அவர்களுக்குக்கோபம் வரும். ஒரு சித்திரக்காரனைச் சித்திரம் எழுதிக்கொண்டிருக்கையில் திருடன் வந்து பெட்டி சாவியைக்கொடு என்று கேட்டால், "இந்தா சாவி, சித்திரம் எழுதுகையில் என்னோடு பேசாதே" என்பான்.

ஐந்தாவது, புருஷர்கள் வேறுவிதமாய் அனுபவிக்கமுடியாததாயும் ஸ்திரீகளுக்கே உரியதாயுமுள்ள பிரஸவானுபவம் முதலிய அபூர்வ அனுபவங்கள் கிடைக்கின்றன. எப்படி ஸ்திரீகள் குழந்தைகளைப் பெறுகிறார்களோ அப்படியேதான் சிற்பசாஸ்திரியும் மனோதர்மத்திலுதித்த குழந்தைகளாகிய சித்திரங்களை சிருஷ்டிக்கிறான். முதலில், மனோதர்ம சக்தி தன்னுயிர்நிலையில் அடங்கி நிற்பதில் திருப்தியில்லாமல் இதர சிருஷ்டிகளை உற்பத்திசெய்து அவைகளுக்குத் தன் ஜீவாதாரமான சக்தியைப்பரவச்செய்து உயிர்ப்பிச்சை கொடுக்க இச்சைப்படுகிறது. இந்த தானத்துக்குப் பாத்திரமான விஷயம் கிடைத்த உடனே அதன் பரபரப்பெல்லாமடங்கிப் போகிறது. அந்த விஷயத்தை முதல் முதல் பூர்ணமாய் கிரஹித்தது முதல் அதைக் கொஞ்சம் கொஞ்சமாய் உருவாக்கி முற்றிலும் முடிக்கிறவரையில் அந்த ஆனந்தம் விருத்தியாகிவருகிறது. கடைசியில் அவ்வுருவம் நம்மிஷ்டப்படி அமைந்தால் திருப்தியுண்டாகிறது; இல்லாவிட்டால் துக்கமுண்டாகிறது. எப்படி ஒரு தாய் கடைசியிற் பெற்றதாகிய கைக்குழந்தையினிடத்திலே அதிக வாஞ்சையாயிருக்கிறாளோ, அப்படியே சித்திரக்

காரனும் தான் கடைசியில் வரைந்த சித்ரத்தினிடத்திலேயே பக்ஷபாதமால்யிருப்பான். எப்படி ஒரு தாய் தன் குழந்தைகளில் நொண்டி சப்பாணியாகவாவது விகாரமாகவாவது இருக்கிற குழந்தையையே விசேஷமாகக் கொண்டாடுவாளோ, அப்படியே சித்திரக்காரனும் தன் சித்திரங்களில் பிறருக்கு அழகென்று தோற்றாத சித்திரத்தையே மேலானதாகக்கொண்டாடுவான். வீடு நெருப்புப் பற்றிக்கொண்டால் எப்படி ஒரு தாய் தன் குழந்தைகளை எடுத்து முதல் முதல் அப்புறப்படுத்துவாளோ, அப்படியே சித்திரக்காரனும் தன் சித்திரங்களையே முதல் முதல் அப்புறப்படுத்துவான்.

ஆனால் சித்திரக்காரனா யிருப்பதில் ஒரு பெரிய கஷ்டமிருக்கிறது. மேற்கூறிய ஆநந்தங்களை அனுபவிப்பதற்கு கூலியாக இந்தக் கஷ்டத்துக்குட்பட வேண்டியதுதான். ஏனெனில் உலகத்தில் ஒவ்வொன்றுக்கும் ஒரு விலை ஏற்பட்டிருக்கிறது. அவ்விலை கொடுக்காமல் நாம் இச்சித்த பொருளை ஒருநாளும் சம்பாதிக்க முடியாது. திருவருள் ஒன்றே விலை கொடுக்காமல் சம்பாதிக்ககூடிய வஸ்து. எப்படியெனில், நாம் இதற்காக எவ்வளவோ பாடுபட்டாலும், அது கிடைத்த பிறகு நாம் பட்டபாடெல்லாம் இதற்கு எந்த மூலை என்று தோற்றுகிறது. இதை சம்பாதிப்பதற்கு என்ன விலை வேண்டுமானாலும் கொடுக்கலாம் என்று தோற்றுகிறது. ஆதலால் அதை எவ்வளவு உயர்ந்த விலைகொடுத்து சம்பாதித்தாலும் இனாமாகக் கிடைத்ததாகவே பாவிக்கலாம். நான் சொல்லவந்த கஷ்டமென்னவெனில் சித்திரக்காரனுக்குச் சோறுகிடைப்பது நிச்சயமில்லை என்பதுதான். விசேஷமாக சித்திரக்காரர்களுக்கெல்லாம் பொதுவாக ஒரு மனைவியுண்டு, அவள் பெயர் தாரித்திரியம். தெரியாத்தனமாய் இன்னொரு மனைவியைக்கலியாணம் செய்துவிட்டால் அப்புறம் "கூறாமல் சந்நியாசம் கொள்" ளவேண்டியது தான். உலகத்தில் சாப்பாட்டுக்கு வேண்டிய சாமான்களை விருத்தி செய்பவர்கள் உழுது பயிர்செய்யும் வேளாண்மைத் தொழிலாளர்களே. இவர்களுக்குத்தான் உலகத்தில் முதல் பந்தியில் போஜனம். இவர்களுக்கடுத்த படியில் இவர்களுக்கு உதவிவேலைசெய்யும் கைத்தொழில் வேலைக்காரர்கள்; அதற்கடுத்த படியில் இவர்களுக்கு வயிறு நிறைந்த பிற்கு இந்திரிய சுகத்தைக்கொடுக்க உழைப்பவர்களாகிய மிட்டாய்க்கடைக்காரர்கள், அத்தர் பில்லை வியாபாரிகள், கட்டில் மெத்தை செய்யும் தச்சர்களும் தையற்காரர்களும் பங்குக்கு வருகிறார்கள். அதற்குமேல் இவர்கள் கண்ணில் மண்ணைப் போட்டுவிட்டுக்கொள்ளையடிக்கும் அதிகாரிகள், வக்கீல்கள், வியாபாரிகள் முதலியவர்களுக்கு பங்கு. கடைசியில் தான், மனோதர்மத்துக்கு ஆநந்தத்தைக்கொடுத்து மனோசத்திகளை விருத்தி செய்து ஆத்மாநந்தத்துக்கு வழிகாண்பிப்பவர்களாகிய சங்கீத ஸாஹித்ய சிற்பசாஸ்திரிகளும் வித்யாதானம்செய்யும் உபாத்தியாயர்களும் கவனிக்கப்படுவார்கள்: இதற்கும்டுத்த படியிற் சென்றவர்களுக்கு இவ்வுலகத்தில் வேலையுமில்லை இடமுமில்லை. இதற்குமேற்சென்றால் இவ்வுலகம் போய் மேலுலகம் வந்துவிடுகிறது. இதனாலேயே சித்திரவேலைக்காரன் இவ்வுலகில் ஒரு காலும் அடுத்த உலகில் ஒரு காலுமாக இருக்கிறான் என்று ஏற்படுகிறது. இவனுக்குச் சோறு வேண்டுமானால், மற்றவர்கள் சாப்பிட்டு மிகுந்து அவர்களுக்கும் இவன் செய்கிறவேலையும் தங்களுக்குவேண்டியது தான் என்று ஏற்பட்டாலொழிய சாப்பாடுகிடைக்காது. அப்படிப்பட்ட எண்ணம் அவர்களுக்கு ஏற்படுகிறது வெகுதுர்லபம். தானாக ஏற்பட்டாலொழியப் பிறர்சொல்லி ஏற்படாது. ஆனால் சித்திரவேலைக்காரனும் மற்றவர்களைப்போல் உழுதுபயிர் செய்யட்டுமே என்றாலோ, உழவுக்கும் சித்திரவேலைக்கும் ஒத்துவராது. மேழிபிடித்த கைகரடுதட்டிப்போய் பேனாப் பிடிக்க உதவாது. சித்திரவேலைக்கும் வேறுயாதொரு வேலைக்குமே ஒத்துவராது. ஒருவனுக்கு இரண்டு வேலைக்கு சாவகாசமகப்படுவது கடினம். சரஸ்வதிக்கும் லக்ஷ்மிக்கும் மாமி மாட்டுப்பெண் சண்டை என்பது எல்லோருக்கும் தெரியும். சித்திரவேலையைப் பிரதானமாக வைத்துக்கொண்டு, ஒழிந்த வேளைகளில் எங்கேயாவது போய் உப்புப்புளிக்கு சம்பாதிக்கலாமென்று சொல்லவொண்ணாது.

தாலூகா குமாஸ்தா.

(இன்னும்வரும்.)

# HAMLET, THE TRANSCENDENTALIST.

(FROM SHAKESPEARE).

# ஹேமசந்திரஸிங் என்னும் ஆத்மவிசாரி.

(ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பு.)

*By Sri Rajanáyaki.* ஸ்ரீராஜநாயகி.

## ஐந்தாவது அங்கம்.

காக்ஷி. 1

இடம்:—ஸ்மசானம்.

காலம்:—மாலை.

(இரண்டு தோட்டிகள் கொடுவாள் பாரை மண்வெட்டி தட்டுகளுடன் வருகிறார்கள்.)

முதல்தோட்டி:—இந்தா தம்பி, இந்த வெறவெல்லாம் நல்லா வெட்டி ஒடிச்சுப்போடு, நான் அடுக்கிறேன்.

இரண்டாவது தோட்டி:—கீழே கிடக்கிற எலும்பு சாம்பலெல்லாம் அப்பாலே தள்ளினால்லோ அடுக்கலாம், அண்ணே.

முதல்தோ:—என் தம்பி, உன்னை வடையைத் தின்னச் சொன்னாங்களோ, பொத்தலெண்ணச் சொன்னாங்களோ? அடுக்கிறது என்வேலையல்லோ, நீ சும்மா வெறவெ ஒடிச்சுப்போடு தம்பி, மற்றதெல்லாம் நான் பாத்துக்கறேன்.

இரண்டாந்தோட்டி:—இல்லே அண்ணே, சும்மாக்கேட்டேன், கோயிச்சுக்காதே.

முதல் தோட்டி:—நான் ஏன் கோயிச்சுக்கிறேன் தம்பி, மேஸ்திரியார் தான் சொல்லி யிருக்காரே, இன்னும் ஒரு நாழிக்குள்ளே வேலே முடியாட்டி, உயிரெ எடுத்தூடுவேனிண்ணாரே, நீயும் தானே கேட்டுக்கிட்டிருந்தே!

இரண்டாந்தோட்டி:—அப்புறம் எனக்கு அதக்குமேலே தெரியாதோ?

முதல் தோட்டி:—என்ன செய்தூடுவே?

இரண்டாந்தோட்டி:—அவரு என் உயிரை எடுத்தூட்டா, அப்புறம் நான் செத்துப் பூடறேன், உயிரை எடுக்கிற அதிகாரம் அவருக்கிருந்தா, செத்துப்போற அதிகாரம் எனக்கில்லையாங்காட்டியம்!

முதல் தோட்டி:—வேலையை முடிச்சுட்டல்லோ செத்துப் போகணும், இட்ட வேலையை செய்யாதே செத்துப் பூடலாமோ?

இரண்டாந்தோட்டி:—பூட்டா?

முதல் தோட்டி:—சர்க்காரிலே கண்டுக்கிட்டா பொலீசுலே கொண்டே வெச்சுப்பிடறாங்க.

இரண்டாந்தோட்டி:—"பண்டாரத்து வாழையெல்லாம் கண்டாத்தானே" அண்ணே! இவங்க காண்றத்துக்குள்ளே நான் யமலோகம் பூட்டா அங்கே கூட போலீசான் வருவானோ?

முதல் தோட்டி:—அங்கே போய் சம்பாதிச்சு வெச்சினா அங்கேயுந்தான் வருவான்! கொஞ்சம் பொயிலை கொடு தம்பி!

இரண்டாந்தோட்டி:—(புகையிலை கொடுத்து விட்டு) சுண்ணாம்பு வேணுமா, அண்ணே? இன்னிக்கி போலீசானுக்கு ஏதாக்கியம் கைநிறைய வந்திருக்குமோ அண்ணே!

மு-தோ:—திருடன் தன் வீட்டிலே தானே கன்னம் வெச்சுக்குவானடா? போலீசான் சர்க்கார் ஆள் தானே, செத்துப் போனதும் சர்க்கார் மனுசாள் வீட்டிலே தானே! அப்படி யிருக்கச்சே அவனுக்கு யாரு என்ன கொடுப்பாங்க?

இ-தோ:—காலமேக்கெல்லாம் சர்க்காரிலே என்ன என்னமோ சாக்கி விசாரிச்சாங்களாமே, இந்தப் பொம்பிள்ளையைப்பத்தி! என்னத்துக்கண்ணே?

மு-தோ:—அவள் என்னமா செத்துப்போனளென்னுதான்!

இ-தோ:—என்னமாசெத்துப்போனதாக ஏற்பட்டுதாம், விசாரிப்பிலே?

மு-தோ:—தண்ணிலே உழுந்துதான் செத்துப் போனளாம்.

இ-தோ:—இதைக்கண்டு பிடிக்கத்தானா ஒரு முனிச்சீப்பூ, இரண்டு கொத்துவாலு, மூணுகட்டு வக்கலு நாலு டப்பி வைத்தியரு எல்லாருமாக கூடிக்கிட்டு குந்திக்கிட்டிருந்தாங்க? இவங்களுக்கு குடுக்கிற சம்பளத்திலே எனக்கு பேர்பாதி குடுத்தாக்க, இவங்க "கண்டு" பிடிச்சத்தே நான் முன்னேயே "நண்டு" பிடிச்சிருப்பேனே!

மு-தோ:—எஞ்சு சொல்லாதேடாலே, கச்சேரிலே கொண்டே வெச்சுடப்போறாங்க!

இ-தோ:—வெச்சுப்பிட்டா அங்கே போய் வேலே பாக்கிறேன்.

மு-தோ:—ஒனக்கென்னு சட்டந்தெரியும்டா, வேலேப்பாக்கிறத்துக்கு?

இ-தோ:—அநந்தரவார்சில்லாட்டி அசல் வழக்கில்லே. வெண்ணேப்பத்திரத்துக்கு எண்ணஞ்சு நாளே கெடு. பொண்டாட்டி கெட்டால் புருசனுக்கு வாயில்லே. இதான் சட்டம் தெரியாதா? அதிருக்கட்டும், வைத்தியருகூட வந்திருந்தாங்களாமே, அவங்க என்னுசொன்னுங்க?

மு-தோ:—என்னு சொல்லுவாங்க, மருந்து குடுத்தாங்க, கைபிடிச்சுப்பாத்தாங்க, அப்புறம் கடசீலே "உயிர்போனு மயிர் போச்சுது, நல்ல நல்ல மருந்தெல்லாம் குடுத்துட்டோம், இன்னுங்க. எனக்கு நீ காருவாக்காசு கொடுக்கணுமே எப்போடாதாரே?

இ-தோ:—தர்ரேன் அண்ணே, எங்கே ஓடிப்போவுது ஒங்காசு?

மு-தோ:—தர்ரேன், தர்ரேன் என்னு, எப்போ?

இ-தோ:—நீ தான் நேத்துப்பாத்துக்கிட்டிருந்தியே, வாய்க்காங்கரை ஓரத்திலே நான் புளியங்கொட்டை பொதெக்கில்லே?

மு-தோ:—ஆமாம்.

இ-தோ:—பின்னே என்ன, அது ஒனக்குத்தான்.

மு-தோ:—பணத்துக்கு பதிலா புளியங்கொட்டை தாரேன் என்கிறேயா?

இ-தோ:—இல்லே அண்ணே, அது மரமாகி புளிகாச்சுது இன்னுக்க, அதைவித்து ஒனக்குக் காசு குடுத்துடமாட்டேன்? என்னு அண்ணே சிரிக்கிறே, கடனுக்கு வழி பொறந்தது என்னு சந்தோசமோ?

இ-தோ:—என்னடாலே, நானும் பெரிய மனுசாள் என்னு நெனச்சுக்கிட்டியோ? எங்கிட்டக்கூட பரியாசம் பண்றே! ஒடம்பு ஊதிப்போச்சுதோடா ஒனக்கு?

இ-தோ:—ஆமாம் அண்ணே, எங்கபாட்டியாரு செத்ததிலே எனக்கு மனசுக்கு துக்கம் வந்துடுச்சு. சும்மா அழுதழுது பெரு மூச்சு உட்டத்திலே திரேகம் காத்துக்கொண்டு ஊதிப்போச்சுது!

மு-தோ:—இன்னிக்கி வெறவு பொளக்கிறத்திலே ஒன் சதையைக்கரெச்சுடமாட்டேன் (ஹேமசந்திரலிங்கும் ஹரிராஜலிங்கும் தூரத்தில்வருகிருர்கள்.)

இ-தோ:—இதோத்தான் எல்லாம் பொளந்தாயிடுச்சே!

மு-தோ:—அப்படி இன்னு ஆத்துக்கப்பாலெ கடெக்கிப்போயிரெண்டு மொந்தெ வாங்கியாடா காசுதாரேன், நீயும் ஒரு மொந்தை குடிக்கலாம். ராவிக்கு முழுக்க இங்கேயே படுக்கத்தேவலே?

(இரண்டாவது தோட்டி போய்விடுகிருன்.)

இராகம்:—தெம்மாங்கு மெட்டு.

ஆற்றுக்கக்கரையிலே அழகான தென்னம் [பிள்ளே
தென்னம் பிள்ளேச்சோலேயிலே தெம்மாங் [கு நான் பாடையிலே *
வந்தாளென் பெண்டாட்டி வாய்த்தவொரு [கண்ணுட்டி
பாடையிலே பார்க்க வென்னேப் பரபரப்பாய் [தான் வந்தாளே!
நன்னுனே நன்னுனே நானிநன்னு நன்னுனே.

(என்றுபாடிக் கொண்டே எலும்புகளேப் பொறுக்கி ஒருபக்கமாய்ப்போடுகிருன்.)

ஹேமசந்திர:—என்ன ஐயா, இந்தப்பயலேப்பார்த்தீர்களா? கை சிதை அடுக்குகிறது, வாய்பாடுகிறது! மனதில் துக்கம் கூச்சம் ஒன்றுமிராதோ இவனுக்கு! நெத வேலே செய்யும் பொழுது என்ன பாட்டு, என்ன குதூஹலம் வேண்டியிருக்கிறது?

ஹரிராஜ்:—அவன் அதற்கென்றே பிறந்திருக்கிருனே! தினம் பொழுது விடிந்தால் சவத்தின் முகத்தில் விழிக்கிறவனுக்கு துக்கமேது கூச்சமேது? மேலும் அவன் மனது இப்பொழுது ஒரு மொந்தை கள்ளில் லயித்திருக்கிறது.

ஹேமசந்:—ஆம் தாங்கள் சொல்லுகிறது சரிதான். வேலே செய்து காய்த்துப்போன கைக்கு கீறினும் ரத்தம் வருகிறதில்லே. மாமியார் வீட்டுக்குப்போகும் புது மாப்பிள்ளேக்குக் காதவழி நடந்தாலும் கால்வலிக்கிறதில்லே. எல்லாம் அப்பியாஸமும் உத்ஸாஹமும் தான்.

முதல் தோட்டி:—(பாடுகிருன்)

ராகம்:—ஸஹானு

மீசை நரைச்சுப்போச்சே கிழவா தோசை தின் [ன முடியாதே,
பல்லு விழுந்து போச்சே கிழவா நெல்லுக்கொ [ரிக்க முடியாதே,
கூனிக்குறுகிப் போச்சே கிழவா குண்டாந்தடி [வேணுமே,
மானிடஜன்மமடா கிழவா மாகாணிப் பொன் [சேரடா!

(ஒரு மண்டையோட்டை எடுத்தெறிகிருன்.)

ஹேமசந்:—அந்தத்தலேயில் ஒரு நாக்கிருந்து பேசியகாலத்தில் இந்தப்பயல் அதை இவ்வளவு அலக்ஷியம் செய்யமுடியுமா? அதைக்கண்டால் "சாமி தெண்டம்" என்று குனிந்து கும்பிட்டிருப்பான். அந்தத்தலேயும் வெகு அழுத்தலாய் ஒரு தாம் அசைந்திருக்கும். ஒருக்கால் அந்தக்கபாலத்துக்குள் யுக்திகள் நிரம்பிய ஒரு மந்திரியின் மூளே இருந்திருக்கலாமல்லவா? இப்பொழுது அதன் யுக்திகளெல்லாம் இந்த ஆபத்துக் குதவாமல் எங்கே ஓடி ஒளித்தன?

* "பாடையிலே" என்ருல் "பாடும்பொழுது" என்றர்த்தம்.

ஹரிராஜ:—அந்த யுக்திகளெல்லாம் விருத்தியாகி இருக்க இடமில்லாமல் இந்த மூளையை விட்டு வேறு மூளைக்குக் குடியேறிவிட்டன.

ஹேமசந்:—அல்லது ராஜகடாக்ஷத்தில் உயர்ந் தோங்கி வளர்ந்த ஒரு பிரபுவின் மூளையிருந்திருக்க லாம். தனக்கு சினேகிதனை இன்னொரு பிரபுவின் குதிரையை சவாரிக்கு யாசகம் கேட்க விரும்பி "என்ன ஐயா ராஜாஜி! சௌக்கியமா? தங்கள் புதிய குதிரை எங்கே வாங்கினீர்கள்? வெகு வேகமாய்ப்போகிறதே! அதன் நடை அழகுக்கே ஆயிரம் வராகன் கொடுக்கலாம்." என்று காரியார்த்தமாக கேவலம் ஒரு மிருகத்தை ஸ்தோத்திரம் செய்திருக் கலாம்.

ஹரிராஜ:—ஆம்! அதற்கென்ன தடை?

ஹேமசந்:—இப்பொழுது காக்கை கழுகு நாய் நரிகள் தின்றது போக மருந்ததையும் இந்தப்பயல் மண்வெட்டியால் வாரி எறிகிறான். இப்படி மீசை முளைத்த குழந்தைகள் போல் அற்ப விளையாட்டுக ளில் காலத்தைக்கழித்து விட்டுக் கடைசியில் மண் ணுக்கிரையாவ தற்குத்தானோ ஜன்மம மெடுத்தது? இந்த வாழ்வை நினைத்துப்பார்த்தால் எனக்குத்தலை வலி வந்து விடுகிறது.

மு-தோ:—(பாடுகிறான்)

ராகம்;—தெம்மாங்கு மெட்டு.

சின்னச் சின்ன வண்டி கட்டி சிவப்புமா டிரண்
[டு கட்டி,
பச்சை யிலுப்பை வெட்டிப்பால் வடியப் பார
[மேற்றி,
பால்வடியுமுன் முகத்தைப்பார்த்துப் பசிதீர்த்
[திடவே,
வாராண்டி யுன்புருஷன் தில்லங்காட்டுச்சாலை
[யிலே தில்லாலே நன்னானே.

(இன்னொரு மண்டையோட்டை எடுத்தெறிகிறான்)

ஹேமசந்:—அதோபார், இன்னொரு ஓடு! ஒருக் கால் அது ஒரு பெரிய வக்கீலினுடைய மண்டை ஓடாயிருக்கலாம். தன்னை அபாயகரமான ஆயுதங்க ளால் அக்கிரமமாய் ஆக்கிரமித்ததற்காக ஏன் இந்த த்தோட்டி பேரில் அவன் பிரியாது கொடுக்காமலி ருக்கிறான்? அவனுடைய விண்ணப்பங்களும் வாக் கு மூலங்களும் வசாலத்துக்களும் எந்த மூலையில் போய் பதுங்கிக்கொண்டன? ஒருக்கால் அவன் த ன்னுடைய சம்பாத்திய முழுவதையும் வீண்போகா மல் நிலத்திலேயே போட்டிருக்கலாம். அந்த நிலங் களைத் தன்னுடையதென்று ஸ்தாபிக்கும் பொருட்டு என்னபாடு பட்டிருப்பான்? எத்தனை காகிதங்களும் பேனா மைக் கூடுகளும் செலவழிந்திருக்கும்? இப் பொழுது அக்காகிதங்கள் எப்போதும் போல் காகித ங்களாகவேயிருக்கின்றன. நிலங்களும் நிலங்களாக வேயிருக்கின்றன. இவனைத்தான் ஆஸாமியைக்கா ணோம். இந்த அற்பமுடிவுக்கு எத்தனை கிரயபத்திர ங்கள், எத்தனை பட்டா சாஸனங்கள், எத்தனை வா ல் நுழையாத வார்த்தைகள்? இத்தனை காகிதங்க ளும் இவ்வளவு பெரிய வார்த்தைகளும் சேர்ந்து கடைசியில் இவனுக்கு ஒரு மண்டை ஓடு நிரம்பக் கூடிய மண்ணுக்குமேல் ஒரு தூசுகூடக் கிடைக்க வில்லையே! அக்காகிதங்களையெல்லாம் கிழித்துக் குப்பையாய்ப் போட்டால் கூட இதைக்காட்டிலும் அதிகமாயிருக்குமே!

ஹரிராஜ:—இருக்கிறவர்களைப் பரிஹாஸம் செய் கிறீர்களோ?

ஹேமசந்;—அப்படியல்ல! நான் உண்மையைச் சொன்னேன். எனக்குப் பரிஹாஸம் செய்யப்பொ ழுதில்லை. நான் சொல்லுகிறது பொய்யா என்று இந்தத் தோட்டியை வேண்டுமானாலும் கேட்போமே. (தோட்டியைப் பார்த்து) இந்தச் சிதை யாருக்காக அடுக்குறாய்.

தோட்டி:—எனக்காகத்தான். (பாடுகிறான்.)

"பாடையிலே பார்க்கவென்னைப்பரபரப்பாய்த்தான்
[வந்தாளே-"

நன்னானே நன்னானே நானிநன்னா நன்னானே.

ஹேமசந்:—நீ தான் உயிருடனிருக்கிறாயே, உனக்கென்னத்துக்கு? இதன் பேரில் யார் படுக்கப் போகிறார்களென்று கேட்டான்.

தோட்டி:—இதிலே யாரும் தானாகப் படுக்கமாட் டாங்க- நாலுபேர் சேர்ந்து யாரையாவது தூக்கிவந் துபடுக்க வெச்சால் வெக்கலாம்.

ஹேமசந்:—அப்படியேதானிருக்கட்டும், இதில் எவனைப் படுக்கவைக்கப் போகிறது?

தோட்டி:—எவனையுமில்லை.

ஹேமசந்:—இல்லாவிட்டால் எவளை?

தோட்டி:—எவளையுமில்லை.

ஹேமசந்;—ஆனால் எதை?

தோட்டி:—ஆ! அப்படி கேளுங்கசாமி! சற்றுமுன் னே பொம்பிள்ளையா யிருந்து இப்போ சவமாயிருக் கிற ஒரு கட்டையை இதிலே வெச்செரிக்கப்போரா ங்க!

ஹேமசந்:—என்ன இலக்கணமாய்ப் பேசுகிறான் இந்தப்பயல்! இவனோடு பேசுகிறதற்கு நிகண்டு படித்தாகவேண்டும் போலிருக்கிறதே! இந்த நாளி ல் குப்பைவண்டிக்காரன் கூட சட்டம் பேசுகிறான். நமக்கு சட்டந் தெரியாவிட்டால் அனர்த்தமாயிருக் கிறது—அந்தப்பெண்கட்டை எப்படி இறந்ததாம்?

தோட்டி:—என்னவோ பெரிய மனுசாள் வியாதி போலிருக்கிறது!

ஹேமசந்:—எதெது பெரிய மனுஷாள் வியாதி? எதெது சின்னமனுசாள் வியாதி?

தோட்டி:—இல்லையா, ஒரு நீர்ரோகம், விரைவா தம், பிளவை, படுவன், மூர்ச்சை, பாண்டு, மேகம், ஜன்னி இதெல்லாம் பெரியமனுசாள் வியாதி.

வாந்திபேதி, குளிர்காய்ச்சல், பசிதாகம், சொரி சிரங்கு இதெல்தாம் சுன்னமனுசாள் வியாதி.

ஹேமசந்:—யார்யார் பெரிய மன்ஷான், யார் சின்னமனுஷாள்?

தோட்டி:—உழுது பயிரிட்டுக் கொண்ணுந்துபோடாவங்க சின்னமன்சாள். இவங்ககொண்ணுந்து போட்டத்தை சாப்பிட்டுவிட்டு சாப்பாடு நல்லாயில்லே என்றவங்க பெரியமனுசாள்- பெரியமனுசான் சாப்பிட்டுவிட்டு மீந்தத்தை சின்னமனுசாளுக்குப் போட்டாங் கன்னுக்கெ, உடனே ஊர்முழுக்க இத்தனேபேருக்கு இனுமாகசோறுபோட்டம்என்னு தம்பட்டம் அடிக்கச்சொல்லுவாங்க... வெயில் நாளிலே கதவைச் சாத்திக்கிட்டு உள்ளே படுக்கிறவங்க பெரியமனுசாள். சாத்தின உள்ளே காத்துவாத்துக்காக வெளியே இருந்து பங்கா இழுக்கிறவங்க சின்னமனுசாள். பங்காகிரீச்சுனு கத்தினுத்தூக்கம்வல்லே என்னு பங்காஜகடைக்கு எண்ணைபோடசொல்றவங்க பெரியமனுசாள். அவங்கசொல்றது காதிலே விழாதே பங்கா இழுத்துக்கிட்டே தூங்கரவங்க சின்னமனுசாள். எப்போ பார்த்தாலும் பசிக்குது என்கிறவங்க சின்னமனுசாள், திண்ணசோறுசெரிக்காத்துக்காக மருந்து சாப்பிடாவங்க பெரியமனுசாள். தன் பணத்தைத்தானுளாமல் அயல் வீட்டுக்கான் திருடிப்பிடுவான் என்று பயந்துக்கிட்டு அறிமுகமில்லாத அயலூரான் கிட்டக்கொடுத்துப்பிட்டு மோசம் செய்தால் அப்புறம் 'ஐயோ எமாந்தோமே' என்கிறவங்க பெரிய மனுஷாள். பெரியமனுசாளாப்போக ஆசைப்படாவங்க சின்ன மனுசாள்.

ஹேமசந்:—நீ எத்தனை நாளாய் இந்த உத்தியோகத்திலிருக்கிறாய்?

தோட்டி:—இப்பொழுது தெற்கே போயிருக்கிறுங்களே இளையராஜா, அவங்க பிறந்த நாள்முதல்.

ஹேமசந்:—அவர் என் தெற்கே போயிருக்கிறுர்?

தோட்டி:—அவங்களுக்குப் பைத்தியம் பிடிச்சிருக்குதாம். தெற்கே போனுல் பைத்தியம் தெளியட்டும்–இல்லாட்டாலும் குற்றமில்லே.

ஹேமசந்:—என் குற்ற மில்லே?

தோட்டி:—அங்கே எல்லா சனங்களும் இவரைப்போலவே பைத்தியமா யிருப்பாங்களாம்-அதினுலே இவர் பைத்தியம் அவ்வளவாகத் தெரியாது.

ஹேமசந்:—அவருக்கு எப்படிப் பைத்தியம் பிடித்ததாம்?

தோட்டி:—அது ரொம்ப ஆச்சரியம் என்று தான் சொல்லுங்க.

ஹேமசந்:—எப்படி?

தோட்டி:—இருந்தாப்பிலே இருந்து ஒரு நாள் திடீர் என்னு புத்தி பிசகிப் பூட்டுதாம்.

ஹேமசந்:—அப்புறம்?

தோட்டி:—அதுக்குத்தான் பைத்தியம் என்னு பேரு.

ஹேமசந்:—உலகத்தில் வரவரப் பைத்தியக்காரர்கள் தொகை அதிகமாகிறதென்று நினைக்கிறேன்.

தோட்டி:—அப்படியொண்ணும் பயப்படவேண்டியதில்லே நீங்கள்! சமுத்திரம் பொங்கி ஊர்முழுகிப் போகாமல் காப்பாத்துவதுபோல் ஒரு அளவுக்கு மேல் பைத்தியம் அதிகமாகாமல் ஆண்டவன் காப்பாத்துவார்.

ஹேமசந்:—எப்படி?

தோட்டி:—பைத்தியக்காரர்கள் தொகை அதிகமாப் பூட்டா அவங்க எல்லாருமாச் சேர்ந்து குறைஞ்ச தொகையுள்ள கட்சியை பைத்தியக்காரக்கட்சி என்னு பெயரிட்டு விடருங்க. ஆசக்கூடி பலத்தகட்சி ஒரு போதும் பைத்தியக்காரக் கட்சியாகாது. தோத்த கட்சிதான் பைத்தியக்காரக்கட்சி.

ஹேமசந்:—நல்லது யாருடையதோல் சீக்கிரம் தீப்பிடிக்கும்?

தோட்டி:—பணக்காரனுடையதோல் தான் சீக்கிரம் தீப்பிடிக்கும். ஏனெனில் அடிக்கடி சவாம் செய்து தைலங்கள் தேச்சு அதைபதப் படுத்தியிருப்பான். பிச்சைக்காரனுக்கு சவாத்துக்கும் எண்ணைக்கும் காசு அம்புடாமல் அவன் தோல்வாண்டுபோய் அழுத்தமாயிருக்கும்.

ஹேமசந்:— (ஒரு மண்டையோட்டை எடுத்து) இந்த ஒடு எத்தனை நாளாய் இப்படி பூமியில் கிடந்திருக்கும்?

தோட்டி:—சுமார் இருபது வருஷமாயிருக்கும்.

ஹேமசந்:—அது எப்படி தெரிந்தது?

தோட்டி:—அதிலிருக்கிற கோணல்களைப் பார்த்தாக்க அது 20 வருஷத்துக்கு முன்னிறந்துபோன கட்டியக்காரனுடைய மண்டையோடாயிருக்கும் என்னு நினைக்கிறேன்.

ஹேமசந்:—இதுவா?

தோட்டி:—ஆம்.

ஹேமசந்:—எங்கே பார்ப்போம்? ஆமையா, எனக்குக்கூட அந்த வாசாலனைத்தெரியும்-நன்ருய் ஞாபகமிருக்கிறது. நான் குழந்தையாயிருக்கும்போது என்னைத் தோள்மேல் தூக்கிக்கொண்டு எத்தனையோ தடவை முத்தமிட்டிருக்கிருன். நானும் அவனுடைய கன்னத்தை எததனையோ தடவை கிள்ளி விளையாடியிருக்கிறேன். அடே நீதானு எல்லாரையும் பரிஹாசம் பண்ணிக்கொண்டிருந்தாயே, நீயே இந்த லக்ஷணத்துக்கு வந்துவிட்டாயா! உன்னுடைய அழகைப் பழிக்கிறதற்குக்கூட உனக்குவாயில்லையே! ஐயோ பாவமி! மன்மதனைக் கடவுள் எரித்த பிறகு அவனுடைய எலும்புக்கூடும் இவ்வளவு விகாரமாகத் தானிருந்திருக்குமோ? இப்படிதான் நாறியிருக்குமோ?

ஹரிராஜ:—மன்மதன் என்பது எலும்புக்கூடல்லவே; எலும்புக் கூட்டைச் செய்து அதன்மேல் தோலையும் சதையையும் போர்த்து அதற்கு அழகும் அமைப்பும் தன்னிடத்திலிருந்து கொடுத்தவனல்லவோ மன்மதன். தாங்கள் சொல்லுகிறது எப்படி என்றால் பிரதிமையின் அழகு சிற்பியின் மனதிலில்லை, கருங்கல்லில் தான் இருக்கிறது என்பது போலிருக்கிறது.

ஹேமசந்:—நான் அப்படிச் சொல்ல வரவில்லை. இப்படி தானல்லாத வஸ்துவில் இவ்வளவு அபிமானமும் அகங்காரமும் உண்டாகி விடுகிறதே என்று தான் வருத்தப்படுகிறேன்.

"நீரிற்குமிழி இளமைநிறைசெல்வம்.
நீரிற்சுருட்டு நெடுந்திரைகள்—நீரி
லெழுத்தாகும் யாக்கை நமரங்காளென்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று."

ஓ கோ, அதோ ராஜாவும் பரிவாரங்களும் வருகிறார்கள். இவ்விடத்தையே நோக்கி வருகிறார்கள் முன்னால் ஒரு பிரேதத்தைத் தூக்கிக்கொண்டு வருகிறார்கள். பின்னால் ராணியும் பரிஜனங்களுடன் வருகிறார்கள். என்ன விசேஷமோ தெரியவில்லை. சற்றுமறைவில் நின்று பார்ப்போம். (ஹேமசந்திரஸிங்கும் ஹரிராஜஸிங்கும்மறைவில்போகிறார்கள்.) (உத்பலாக்ஷியின் பிரேதத்தைத் தூக்கிக்கொண்டு பிரபுக்களும் புரோகிதர்களும் பின்னால் லக்ஷ்மணஸிங்கும் ராஜா, ராணி, பரிவாரங்களும் வருகிறார்கள்.)

லக்ஷ்மண:—ஐயா; மேலே நடத்தவேண்டிய கிரியைகளென்ன?

ஹேமசந் :—அது தான் லக்ஷ்மணஸிங்-அவனைப் பார்த்தீர்களா? நல்ல தீரன்.

லக்ஷ்மண:—இன்னும் செய்யவேண்டியதென்ன தாமதியாமற் சொல்லுங்கள்.

புரோகிதன்:—இனி தகனத்தைத் தவிரச்செய்ய வேண்டிய தொன்றுமில்லை-இந்த மந்திரி பிரஜைகளில்லாமல் துர்மரணமாயிறந்தவர்களுக்கு பிதிருமேத ஸம்ஸ்காரங்களே கூடாதென்றும் கேவலம் சிசுவத்தாய் அடக்கம் செய்ய வேண்டுமென்றும் பாஷ்யகாரர் எடுத்திருக்கிறார்கள். இருந்தாலும் சில விசேஷ பிராயச்சித்தங்கள் செய்தால் தகனத்துக்கு அர்ஹதை உண்டு என்று அவரே சொல்லியிருக்கிறபடியாலிம்மகா சமுகத்து ஆக்ஞைக்குக்கட்டுப்பட்டு நாங்கள் இவ்வளவு தூரம் பிரயத்தனப்பட்டோம்! இனி அக்கினியைப்போடலாம்.

லக்ஷ்மண :—இதைத் தவிர வேறொன்று மில்லையே?

புரோகிதன் :—இதற்குமேல் செய்ய சாஸ்திரத்தில் எங்களுக்கு அதிகாரம் கொடுக்கவில்லை. அப்படி நாங்களாக எதாவது செய்கிறதாயிருந்தால் இந்தப்புல் பிடிக்கிற உத்தியோகத்தை நாளைக்கே விட்டுவிடவேண்டும்.

லக்ஷ்மண :—நல்லது போதும் போங்கள். இனி மரணாவஸ்தையில் உழன்று கொண்டிருக்கிறவர்க்கும் என் தங்கை தேவதாரூபமாயிருந்து அவர்களுடைய வேதனைகளை உபசாந்தி செய்வதை நீரே ஸ்வானுபவத்தில் கண்டுகொள்வீர்.

ஹேமசந் :—யார்? உத்பலாக்ஷி யார்?

ராணி :— நீயே வாசனையுள்ள பொன்மலராச்சுதே! உனக்கு இந்த வெறுமலர்களால் ஆகவேண்டியதென்ன? (புஷ்பங்களைத்தூவி) ஆனாலும்உனக்கு நான் இதைத்தவிரவேறென்ன கொடுக்கப் போகிறேன்? போய் வருகிறாயா என்னம்மா! நீ எனக்கு மருமகளாய் வந்து உன்படுக்கையறையில் என்கையினால் நான் கொடுக்க வேண்டிய புஷ்பத்தையும் சந்தனத்தையும் இங்கேயா வாங்கிக்கொள்ள இச்சைப்பட்டாய்?

லக்ஷ்மண:—உன்னுடைய பரிசுத்தமான பஸ்பத்திலிருந்து ஜாதிபுஷ்பங்கள் உதிக்கட்டும். உன்னுடைய புத்தியைமாற அடித்த கொலைபாதகனை என்னுடைய சாபம் தொடரட்டும். இன்னொருதரம் உன் முகத்தைப்பார்க்கிறேன்! சற்று நில்லுங்கள். (சிதையின்பேரில் ஏறுகிறான்) நானும் இந்த அக்கினிக்கே இரையாகிவிடுகிறேன். இனி யாருக்காக இவ்வுயிரைக் காப்பாற்றவேண்டும்?

இப்படியே எங்களிருவர்பேரிலும் அக்கினியைப் போட்டுவிடுங்கள்.

ஹேமசந் :—(முன்னுக்கு வந்து) யாரடா அவன் அங்கே சிதையின் பேரிலேறிக்கொண்டு அபிநயம் பிடிக்கிறவன்? இவ்வளவு பெரிய ஊரில் உனக்கு வேறு நாடகசாலை அகப்படவில்லையா? நான் தான் ஹேமசந்திரன் அபிநயபடாடோபத்துவேஷியென்பது தெரியுமல்லவோ? கிழே இறங்கிவா.

லக்ஷ்மண :—உன்னை இன்றைக்கே என்தங்கைக்குத்துணையாக யமலோகத்துக்கனுப்பிவிடுகிறேன்! (ஹேமசந்திர ஸிங்பேரில் பாய்கிறான்).

ஹேமசந் :—அது எனக்கு முற்றிலும் சம்மதமே. அதற்காக நீ சிரமப்படுத்திக்கொள்ளாதே. என்பேரில் கைபோடாதே. நான் ஏதோ பார்வைக்கு சாதுவாயிருந்தாலும் எனக்கும் கொஞ்சம் கோபமுண்டு. இப்படி சமயா சமயம் தெரியாமல் அசந்தர்ப்பமான இடத்தில் தானா என்னை சண்டைக்கு இழுத்துப் பயித்தியக்காரனுக்குகிறது? இது தானா சூரனுக்கழகு.

ராஜா:—அவர்களைப்பிரித்து விடுங்கள்.

ராணி :—அடா ஹேமசந்திரா! ஒதுங்கிவா.

எல்லோரும் :—பிரபுக்களே! இது நன்றாயில்லை.

ஹரிராஜ :—சுவாமி! போதும், நிறுத்துங்கள். (என்று இருவரையும் பிரித்து விடுகிறான்).

ஹேமசந் :—ஒன்றுமில்லை, பயப்படாதேயுங்கள். அவன் சிறுபையனாயிற்றே என்று கொஞ்சம் புத்தி சொன்னேன். அடே லக்ஷ்மணா, உனக்கு என்பேரி

லிருக்கிற மனஸ்தாபத்தை நீ எந்தவிதமாய்த்தீர்த்துக்கொள்ள இச்சிக்கிறாயோ அவ்விதத்துக்கு நான் எப்போழுதும் சம்மதிக்கிறேன். அதற்காக அது உன் தங்கையாயிருந்தபோதிலும் ஒருஸ்திரீயினுடைய பிரேதத்தை அவமானப்படுத்தாதே.

ராணி:—நீ ஏன் அவனோடு சண்டைக்குப்போகிறாய்?

ஹேமசந்:—அவன் அந்தக் சிதையின்பேரிலேறாவிட்டால் எனக்கு அவ்வளவுகோபம் வந்திராது. உத்பலாக்ஷி இறந்துவிட்டாள் என்பது எனக்கிப்பொழுதுதான்தெரியும். இவள் இறந்ததற்கு நானே பலவிதத்தில் முக்கியகாரணமென்பதும்எனக்கு நன்றாய்த்தெரிகிறது. இருந்தாலும் நான் அவளிடத்தில் வைத்திருந்த காதலை இழந்தேனே ஒழிய அன்பை இழக்கவில்லை. நாற்பதினாயிரம் சகோதரர்கள் சேர்ந்தாலும் அவ்வன்புக்கு ஈடாகாது. அப்படியிருக்க இவன் ஏன் என்னெதிரில் பிதற்றுகிறான்? அவளுக்காக நீ இப்பொழுது என்னடா செய்யப்போகிறாய்?

ராணு:—அவன் தான் பைத்தியம் என்று உனக்குத்தெரியுமே லக்ஷ்மணஸிங்?

ஹேமசந்:—நீ என்ன செய்யவேண்டுமென்கிறாய்? அழவேண்டுமென்கிறாயா, நீ ஒருகுடம் கண்ணீர் பெருக்கினால் நான் ஒன்பதுகுடம் பெருக்குவேன். பட்டினிகிடக்கிறேன்கிஎன்றாயா? நீ இரண்டுவேளை பட்டினி இருந்தால் நான் இருபதுவேளை இருக்கிறேன். நெருப்பில் விழப்போகிறாயா? உனக்கு முன் நான் விழுகிறேன். சண்டைக்கு வருகிறாயா? வா, குஸ்திக்கு நிற்போம். ஒப்பாரி வைக்கிறாயா? அரை நிமிஷத்தில் ஐம்பது ஒப்பாரி பாடுகிறேன். அல்லது பிதற்றிக்கொண்டு அபிநயம் பிடிக்கிறாயா? எனக்கு கொஞ்சம்அந்தஅபிநயசாஸ்திரத்தில் பழக்கமுண்டு செப்படிவித்தைக்காரன்போல் நாலுபேருக்கு எதிரில் காண்பித்தால்தானோ உன்வைராக்கியம் வைராக்கியமாகும்? வைராக்கியத்துடன் ஒருவன் சும்மாவுமிருக்க முடியாதா?

ராணி:—இதுதான் பைத்தியமென்கிறது. கொஞ்சம்நேரம் இப்படி ஆடிப்பாடினபிறகுதான் அது தெளியும். பிறகு பொழுதுவிடிய கூண்டிலடைந்த புறாப்போல் வெகுசாந்தமாய் மௌனமாய் கைகட்டிக்கொண்டிருப்பான்.

ஹேமசந்:—என் தாயார் சொல்லுகிறது காதில்விழுந்ததா ஐயா? அப்படியிருக்க ஏன் என்பேரில் கோபித்துக்கொள்ளுகிறாய்? எனக்கு உன்பேரில் கொஞ்சங்கூடவருத்தமில்லை. எப்பொழுதும் நமக்குள்ளிருந்த சிநேகத்திற்கொன்றுங் குறைவில்லை. இருந்தாலும் நான் என்ன சொன்னபோதிலும் என்னபிரயோஜனம்? குருடன்காதில் சங்கூதினாலும் திருடனுக்குத்தோன்றுவது திருட்டுபுத்தியேயொழிய வேறொன்றுமில்லை. (போய்விடுகிறான்).

ராணு:—ஐயா ஹரிராஜஸிங், கொஞ்சம் அவனோடு கூடப்போய் தயவுசெய்து அவனை ஜாக்கிரதையாய்ப்பார்த்துக்கொள்ளுங்கள். (ஹரிராஜஸிங்போய்விடுகிறான்).

(லக்ஷ்மணஸிங்கைப்பார்த்து) நேற்று நாம் பேசிக்கொண்டிருந்தது ஞாபகமிருக்கட்டும். அதைப்பரீக்ஷை பார்க்க இப்பொழுதுதான் சரியான சமயம் வாய்த்திருக்கிறது. நல்லது ஜோதி! நீயும் உன்மகனை சற்று கவனித்துக்கொள். சீக்கிரத்தில் இந்தக்குழப்பங்கள் எல்லாம் அடங்கி ஓய்வுகாலம் வரும். அதுவரையில் நாம் பொறுத்துக்கொள்ளவேண்டும். (எல்லோரும் போய்விடுகிறார்கள்.)

(இன்னும் வரும்.)

## POISONS SECRETIONS OF THE HUMAN BODY PRODUCED BY PAISSIONS.

### கோபதாபங்களினாலுண்டாகும் விஷநீர்.

இக்காலத்தில் ஜீவனுக்கு முக்கிபாதாரம் ஆகாரமென்றே நினைக்கிறார்கள். ஆனால் உண்மையில் ஆகாரம் மாத்திரமே ஜீவாதாரமாகவில்லை. எப்படியென்றால் உயிருக்கு ஆதாரவாயிருக்கும் ஆகாரமே உயிரைவாங்கவும் காரணமாயிருக்கிறது. ஜனசமூக க்ஷேமத்தில் சிரத்தையெடுத்துக்கொள்ளும் வைத்தியர்களைக்கேட்டால், இக்காலத்தில் ஆகாரமின்றி பட்டினியால் வருந்திச்சாகிறவர்களைவிட, மிதமிஞ்சிய ஆகாரத்தால் நோயுற்று வருந்திச்சாகிறவர்கள் தொகையே ஜாஸ்தியென்று சொல்வார்கள். "திரிஜகத்சிருஷ்டிஸ்திதிகர்மக்ருத்"—ஸ்தூல சூக்ஷ்ம காரணரூபங்களாகத் தோற்றும் எல்லாவற்றையும் சிருஷ்டித்துக்காத்தழிப்பது "தேஜோமனம்", அதாவது 'தேஜஸ்'=பிரகாசரூபமாயிருக்கப்பட்ட மனஸ் என்று சுருதி முறையிடுகின்றது. இந்தத்தேஜோமனம் நாதஸ்வரூபமான "த்வனி" க்குள் இருக்கிறது. "த்வனி" யென்றால் கர்ணேந்திரியத்துக்குப் புலப்படும் ஓசையல்ல. ஆனால் அதிசூக்ஷ்மமாய் காதினால் கேட்பதற்கு அசாத்தியமானதாய், புலன் பொறிகளுக்கெல்லாம் காரணமானதாயிருக்கும் "த்வனி" யொன்றிருக்கிறது.

அது மயில் முட்டையில் மயில் தோகையின் அழகான பலவர்ணங்களும் ரூபமும் எப்படி நீராகாரமாய் கண்ணுக்குத் தெரியாமல் காரணரூபமாக அமர்ந்திருக்கிறதோ, அப்படிப் போல 'பச்யந்தி' யென்று சொல்லும் வாக்கில் த்ரிகுணோற்பத்திகாரணமாக வுண்டாகும் சூக்ஷ்மாதிசூக்ஷ்மசலன ஸ்வரூபமாகவிருக்கிறது. பொறிபுலன்களுக் கெட்டாத இந்த "த்வனி" யோவெனில் 'அநாஹதசப்தத்துக்குள்' அதற்குக்காரணமாகவிருக்கிறது. இந்த அநாஹதசப்தம் ஹிருதயத்துக்குள் உண்டாவது. இது கர்மேந்திரியத்திற்குப் புலப்படாதாயினும் மனதால் மட்டும் உணரத்தக்கதாம். இந்த சப்தம் "அ" ரூபமாய், பிரணவமாத்திரமாய் நிற்கும். இதற்குள் அகார, உகார, மகார ரூபமாய்ச்சேர்ந்து உச்சரிக்கப்படும் "ஓம்" என்பதின் சப்தம் அடங்கும். இந்த அநாஹதசப்தம் இடைவிடாது மனதில்தாக்கும்படி மனதை நிறுத்தியுணர்கிறவன் போகத்தின் மூன்றாம்படியில் நிற்கிறவனாகிறான். அவன் இந்த அநாஹதசப்தத்தை மனதில் வாங்கிக்கொண்டு அதனுள்ளிருக்கும் "துவனி"! யை உணரக்கூடிய நிலைக்குவந்துவிட்டால், அப்பொழுது அவன் "நாதானுசந்தானம்" செய்ய அருகனாகிறான். அதாவது நாதத்தோடு ஒன்றுபட்டு அந்த நாதஸ்வரூபமேயாகும் சக்திவாய்ந்தவனாகிறான். இப்படி நாதானுசந்தானத்தில் தேறினவன் அந்நிலையிலிருந்து அந்தர்முகமாகத்தன்னைத்தானே பார்த்துக்கொள்ளும் பொழுது தேஜோமனதரிசனம் கண்டு, அந்த தேஜோ ரூபமான மனசோடு ஒன்றுபட்டவனாகிறான். அப்படியானவனுக்கு த்ரிலோகத்திலும் கிடைக்கக்கூடாதவஸ்து ஒன்று இல்லை. மனோவிகாரங்களையடக்கி ஏகாக்கிர சிந்தையினால் அடையத்தக்க நிலைமையிப்படியாக, கோபதாபங்கட்குட்பட்டு மனப்போனவழியில் சென்று விஷயப் பற்றுகளிலகப்பட்டுழலும் "தேஹோஹம்"="நான்தேகம்" என்கிற தேகபாவமுடையவர்கள் நிலையென்னவோவெனில், அவர்கள் கோபதாபங்களுக் கிடங்கொடுக்குந்தோறும் அதனாலுண்டாகும் ஒரு விஷநீரால் தேஹம் விஷமேறி, தன்னைத்தானடக்கியாளும் சக்தியிழந்து "கோபம், பாபம், சண்டாளம்" என்றபடி அனேகபழிபாபங்களுக்காளாகிறார்கள். இது யோகசாஸ்திரத்தின் கொள்கைமட்டுமல்ல. மேற்றிசைவிற்பன்னர்களும் இதனுண்மையை ஆராய்ந்தறிந்திருக்கிறார்கள். உதாரணமாக, அமரிக்காஐக்கியமாகாணங்களில், வாஷிங்டன் பட்டணத்திலுள்ள ப்ரொபெஸ்ஸர் எல்மர் கேட்ஸ் என்பவர், பலவிதபரீக்ஷைகள் செய்து, காமக்குரோதலோப மோஹமத மாச்சரியங்களாகிய மனோவிகாரங்களால் மனுஷதேகம் எப்படி விஷமேறிக்கெட்டுப்போகிறதென்று காட்டியிருக்கிறார், ஒவ்வொரு மனோவிகாரத்தினாலும் தேகத்தில் ஒருவித நீர் ஊறுகிறதென்று அவர் ரசாயனமுறைப்படிகண்டுபிடித்திருக்கிறார்கள். உதாரணமாக, கோபத்திலிருந்துபழுப்பு நிறமான ஒருவிஷமுண்டாகிறது. அதை வேறுமனிதர்களுக்கு அல்லது பிராணிகளுக்குக் கொடுத்தால், திமிர்வாதம் போன்ற ஓர் நரம்புவலிகாண்கிறது. பொறாமை யல்லது மாச்சிரியத்தால்நேரும் விஷநீர்களோ மிகவும் கொடியவை. அந்த நீரை கினீபிக்கின் (Guinea-pig) இரத்தத்தில் கலக்கும்படி பீச்சிப்பார்த்ததில், அந்த விஷத்தால் அப்பிராணி சிலநிமிஷங்களில் இறந்துவிட்டது. எல்லா மனோவிகாரங்களிலும் குரோதம் (பகை) ஒன்றினாலுண்டாகும் விஷம் மிகவும் கொடியதாயிருக்கிறதென்று ப்ரொபெஸ்ஸர் கேட்ஸ் கண்டுபிடித்திருக்கிறார். ஓருமணிநேரம் தீராப்பகைபாராட்டினவனுடைய தேகத்திலிருந்துண்டாகும் விஷம் 80-பேர்களைக்கொல்லப்போதுமானதென்று நிரூபித்துக்காட்டியிருக்கிறார். இதெல்லாம் யோகசாஸ்திரப்படி உண்மையே. கோப தாபம் முதலிய மனோவிகாரங்கள் எப்படி விஷநீரையுண்டுபண்ணுகின்றதோ அப்படியே அதற்குமாறாகவுள்ள அன்பு, ஆதரவு, மைத்ரபாவம், கருணை முதலிய உத்தமகுணங்களால் தேகத்திற்கு சுகிர்தம்தரும் ஒருவிதமான "மதுரோதகம்", -- "இனிமையானசுகந்தஜலம்" உண்டாகிறது. இதைத்தான் அமிர்தமென்றுசொல்லுகிறது. இந்த அமிர்தபானம் செய்தவன் மிர்த்தியுஜயமடைகிறான். "ஆலமமுதாக்கி, அமுதை நஞ்சாக்கும்" குணம் ஈசுவரனுடைய மஹிமைகளில் ஒன்று. மனோவிகாரங்களுக்கிடங்கொடுப்பதால் வரும் பாதகமும், மனோநிக்ரகம் செய்து அன்பேயுருவாயமர்ந்திருத்தலினாலுண்டாகும் சாதகமும் இதனால் "தேஹபாவமே" மேற்கொண்டிருப்பவர்களுக்கும் வெள்ளிடைமலைபோல் நன்றாகவிளங்கும்.

——:*:——

## அர்பத்நட் குற்றக்கேஸ் முடிவு.

சென்னை ஜெயிலில் நம்பிக்கை மோசம் செய்த குற்றத்திற்காக மண்சுமந்துவரும் கைதியான ஸர் ஜியார்ஜ் ஆர்பத்நட் பேரிலுள்ள இதர சார்ஜுகள் விசாரணைசெய்யப்படும் பொருட்டு, அக்டோபர் மீ 3உ வியாழக்கிழமை ஸ்பெஷல் ஸெஷன்ஸ் கூடினவுடனே, கைதியின்கௌன்ஸெலான மிஸ்டர் நேபியர் எழுந்து கேஸ் விசாரணை தொடங்குமுன் ஒரு விண்ணப்பம் செய்துகொள்ள விரும்புகிறதாகச் சொல்லி கோர்ட்டார் அனுமதிபெற்றுக்கொண்டு பின் வருமாறுபேசினர். கைதி இண்டஸ்ட்ரியல் கேஸில் குற்றவாளியென்று தண்டிக்கப்பட்டதைப்பற்றி அப்பீல் செய்யப்போவதாக நோட்டீஸ் கொடுத்ததின்மேல், பப்ளிக்ப்ராஸிகியூடர் இந்தக்கேஸ்களையும் விசாரணைக்குக் கொண்டுவரவேண்டியதாக ஆயிற்றென்று சொன்னர். நடந்த கேஸில் விதித்த தண்டனையை மாற்ற யத்தனப்படாவிட்டால், இக்கேஸ்களை வாப்ஸ் செய்துகொண்டிருப்பாரென்று நினைக்கும்படியாயிருந்தது. இப்பொழுது கைதி நடந்த கேஸில் தண்டனையடைந்ததைப்பற்றி இந்தக்கோர்ட்டிலாவது, இங்கே வேறு கோர்ட்டிலாவது, இங்கிலாந்திலுள்ள எந்தக்கோர்ட்டுகளிலாவது அப்பீல் விண்ணப்பமுதலியன எவ்விதமுயற்சியும் செய்யப்போவதில்லையென்று நிராசையாகக் கைவிட்டு விட்டபடியால், கைதி எவ்விதத்திலும் தனக்கு விதிக்கப்பட்டதண்டனையை மாற்றிக்கொள்ளமுயற்சிப்பதில்லையென்று வாக்குறுதிகொடுக்கிறுன். நானும் கைதிக்குக் கௌன்ஸிலாக அப்படியே உறுதி கூறுகிறேன். இதை நம்பி மிஸ்டர் பௌவல் இந்த சார்ஜகளை வாப்ஸ் வாங்கிக்கொள்வாரா வென்று கேட்டார். மிஸ்டர் பௌவல் கைதி வார்த்தையில் நம்பிக்கையில்லாமையால், அடுத்த ஸெஷன்ஸுக்கு கேஸைத்தள்ளிவைத்துக்கொண்டால், பின்பு வாப்ஸ் வாங்கிக்கொள்ளலாமென்று சொன்னர். மிஸ்டர் நேபியர் இப்பொழுதே வாப்ஸ் வாங்கிக்கொண்டு கைதியை அக்குற்றச்சாட்டுகளினின்று விடுதலை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். விடுதலைசெய்யமுடியாதென்று சொல்லி அட்வொகேட்ஜெனரலோடு சொல்லி கி. பு. கோட் 333-வது பிரிவுப்படி கேஸைமட்டும் வாப்ஸ் வாக்கிக்கொண்டார்கள். எத்தனையோ குடிகளைக்கெடுத்த பாதகனை என்ன செய்தால்தானென்ன! அவன் ஜனங்கள் வயிற்றில் சூடுபோட்டான். அதற்காக அவன் நெற்றியில் சூடு போட்டாய்விட்டது. இன்னமும் அந்தப்பாதகனேடு மல்லாடிக்கொண்டு நிற்பதில் பயனென்றுமில்லை. இனி அவன் இருந்தாலும் இறந்தாலும் இரண்டும் ஜனங்களுக்கொன்றே. ஆகையால் இன்னமும் சர்க்கார் பணத்தை செலவழிக்காமல் அவனை மன்னித்தது இராஜகாருண்யத்துக்கேற்றதே.

## CURRENT TOPICS AND NOTES.

## காலவிசேஷங்களும் குறிப்புகளும்.



**முன்னுரை.** இத்தலைப்பின் கீழ் நாம் எழுதிவரும் விஷயங்களைப்பற்றி விசேஷமாய் ஒன்று சொல்லவேண்டியதவசியமாயிருக்கிறது. கைம்முதலில்லாக்காரணத்தாலும் அச்சாபீஸ் அசந்தர்ப்பங்களாலும் பத்திரிகை அந்தந்தமாசத்தில் வெளிவராது காலந்தாழ்ந்துவருவதாயிருக்கிறது. அதுகாரணம் பற்றி இத்தலைப்பின் கீழ் குறிக்கப்படத்தக்க பல சில்லரை விஷயங்கள் குறிப்பிட யோக்கியமில்லாமல் போகின்றன. அன்றியும் குறிப்பிடும் காலவிஷேங்களும் குறிப்புகளும் சஞ்சிகையின் முன்னேட்டிலுள்ள மாசத்தில் மட்டும் நடந்ததாகவின்றி எழுதுங்காலம் வரையில் நடந்தவையாகவிருக்கின்றன. காலப்போக்கைக்காட்டும் விசேஷங்களைமட்டுமே நாம்குறித்துக் கொண்டுபோவதால், இந்த காலவித்தியாசபேதத்தால் தடுமாற்றமொன்றும் நேரிடாதென்று நம்புகிறேம்.

**கவர்ன்மெண்டு சீர்திருத்தங்கள்.** இந்தியா கவர்ன்மெண்டார் சிலசீர்திருத்தங்கள் செய்ய உத்தேசித்து, பிராதான்யமான பிரபுக்கள் சேர்ந்த ஆலோசனை சபையொன்று ஏற்படுத்தக் கருதி அபிப்பிராயம் கேட்டிருக்கிறுர்கள். அதற்குப்பேர் "கௌன்ஸில் ஆவ் நோடெபில்ஸ்" என்று பேராம். இந்தியாமுழு

மைக்கும் ஒரு ஆலோசனைசபையும், ஒவ்வொரு மாகாணத்துக்கும் இம்மாதிரி ஒரு சபையும், ஏற்படுத்துவதாக உத்தேசம். இந்தக் கௌன்ஸில் மெம்பர்கள் கவர்ன்மெண்டாருக்குடந்தையாக விருந்து இரகசியமாக அவர்களுக்கு ஆலோசனை சொல்வதற்காக ஏற்பட்டவர்களா யிருப்பார்கள். இவர்பெரும்பாலும் "ததாஸ்து" பேர்வழிகளாகவேயிருப்பார்களென்பது பொதுஜன அபிப்பிராயம். இஃதன்றி சட்ட நிரூபண சபை மெம்பர்களையுமதிகப்படுத்த ஏற்பாடு செய்யப்போகிறதாகத் தெரிவித்திருக்கிறார்கள். இதை யெல்லாம் பார்த்தால் "எங்காத்துக்காரருக்கும் கச்சேரிக்குப்போக்கு வரத்துத்தான்" என்று சொன்ன கதையாகத்தான் இந்தியா பெருமையடைய வேண்டுமென்று தோன்றுகிறது. அதிகாரமின்றி வருமானமுமின்றி கச்சேரிக்குப் போக்குவரத்தாகமட்டுமிருக்கும் ஐயாவாழ்வும் கௌரவமும் எத்தனைநாளுக்கிருக்குமோ அத்தனைநாளைக்குத்தான் இந்தச்சீர்திருத்தங்களின் வாழ்வும் கீர்த்தியும் விளங்குமென்று சாமான்ய ஜனங்களும் தாராளமாய்ச் சொல்கிறார்கள்.

**"வந்தேமாதரம்" ஸெடிஷன் கேஸ்.**

"வந்தேமாதரம்" என்னும் பேரால் கல்கத்தாவில் பிரசுரமாகிவரும் தினசரி இங்கிலீஷ்பத்திரிகை இராஜவிரோதமான விஷயங்களைப் பிரசுரித்ததாக அப்பத்திரிகையின் எடிடர், மானேஜர், ப்ரின்டர் மூவரையும் பிடித்து கல்கத்தா போலீஸ் கோர்ட்டில் குற்றம் சாட்டினார்கள். பாபு அரவிந்தகோஸ், எடிடர் என்றும், ஹேமேந்தரநாத் பாக்சி மானேஜர் என்றும், அபூர்வகோஸ் ப்ரின்டர் என்றும் பிடித்து குற்றஞ்சாட்டினார்கள். பலநாள் விசாரணை நடந்தபின் அரவிந்தகோஸ்தான் எடிடர், ஹேமேந்தரநாத் அவர்கள்தான் மானேஜர் என்று ருஜு ஏற்படாமையால் அவர்களிருவரையும் விடுதலை செய்துவிட்டு அபூர்வகோஸைமட்டும் மூன்று மாசத்திற்குத்தண்டனை விதித்திருக்கிறார். அரவிந்தகோஸ் ஸிவில்ஸெர்வீஸ்பரீக்ஷையில்தேறியும் குதிரையேற்றத்தில் சாமர்த்தியம்போதா தென்கிற வியாஜத்தைக்கொண்டு வேலை கொடுக்காமல் தள்ளிவிட்டார்கள். அவர்மஹாபுத்திசாலியாக விருப்பதோடு மஹாதீரர். ஊருக்குழைக்கவேண்டுமென்கிறவிரதம் பூண்டு பரோடாவில் உயர்ந்த உத்தியோகத்திலிருந்ததைவிட்டு விட்டு பெங்காளத்தில் நாஷனல் எடியுகேஷன் அபிவிர்த்தியடையும் பொருட்டு நூதனமாய் ஏற்பட்ட நாஷனல் காலேஜில் அதற்குத்தலைவராக வந்தார். அவர் வந்தேமாதரம் என்னும் பத்திரிகைக்கு விடாது எழுதிவந்தாராயினும்பொறுப்புள்ள எடிடர் அவரல்ல. அவரும் அவரோடு குற்றஞ்சாட்டப்பட்ட ஹேமேந்தரநாதும் விடுதலையடைந்ததைப்பற்றிஇந்தியாவில் சந்தோஷப்படாதவர்கள் இல்லை. வேலையாள் கூலியாள் முதல் "அரவிந்தகோஸ் அவர்களை விட்டுட்டாங்களா" என்று படித்தவர்களையும் பேப்பர்வாசிக்கிறவர்களையும் விடாது விசாரித்து வந்தார்கள். நமக்குள் இங்கிலீஷ்படித்துத்தேறி வயிறார வுண்டுடுத்து வண்டி யேறிச்சவாரி செய்யும்படியான யோக்கியதை பெற்றவர்கள் பெரும்பாலும் சுயநயம் பாராட்டி உள்ளிலொன்றும் உதட்டிலொன்றுமாகப் பேசித்திரிகிறவர்களாக விருந்தாலும், சாமான்யரான ஏழைஜனங்களும் கூலி வேலை செய்து பிழைப்பவர்களும் தேசாபிமானம் பாராட்டி ஊருக்குழைப்பவர்கள் உண்மையறிந்து, அவர்களை முன்பின் பார்த்திராவிட்டாலும் அவர்களுடைய உண்மைக் குணத்துக்காக அவர்களிடத்தில் பிராணப்பிரியமாய் அன்புபாராட்டி வருவது இந்தியாவுக்கு நல்லகாலம் பிறந்திருக்கிற தென்பதைக்காட்டுகிறது. கெட வேண்டியது கெட்டுப் படவேண்டியது பட்டால்,உயிருள்ளது தானே பிழைக்குமென்பது உண்மை. பட்டமரம் துளிர்த்தாப்போல் படித்தவர்கள் சத்குணசம்பத்தின்றிக்கெட்டுப்போக சாமான்யஜனங்கள் படிப்பில்லாவிட்டாலும் உள்ளத்துணர்வும் உண்மையும் பாராட்டுகிறவர்களாயிருப்பது இந்தியாவுக்கு நல்லகாலம் பிறக்குமென்பதற்கோர் உண்மையான அறிகுறியாகவிருக்கிறது. அந்தமட்டில் எல்லாருக்கும் சந்தோஷம்தான்.

**விபினசந்தரபால் தண்டனையடைந்தது.**

"வந்தே மாதரம் கேஸ்" சம்பந்தமாக அதில் நேராகக் குற்றஞ்சாட்டப்பட்டவர்கள் விடுதலையடைய, அக்கோர்ட்டில் சாக்ஷியாகக் கூப்பிடப்பட்ட விபினசந்திரபால் அவர்கள், இந்தக்கேஸ் கவர்ன்மெண்டார் அக்கிரமமாக ஜனங்களுடைய வாக்குசுதந்தரம் மனோசுதந்தரத்தை யடக்கவேண்டுமென்று தொடர்ந்ததாக விருப்பதால், இதில் சாக்ஷிசொல்வது என் மனச்சாக்ஷிக்கு விரோதமாயிருக்கிறது என்று சாக்ஷியம் சொல்ல மறுத்ததற்காக 6 மாசம் அவரை ஜெயிலுக்கு அனுப்பி விட்டார்கள். மனச்சாக்ஷிக்கு விரோதமாய் நடக்க இணங்காமைக்காகத்தண்டனை விதிக்கப்பெற்றது அதிசயத்திலும் அதிசயந்தான் என்று எல்லாரும் ஆச்சரியப்படுகிறார்கள்.

**"சந்தியா" கேஸ்.**

"ஸந்தியா" என்னும் பத்திரிகையின் அதிபர் இராஜ விரோதமாக எழுதினதற்காகக் குற்றஞ்சாட்டப்பட்டு நிற்க, அவர் குறை கூறப்பட்ட விஷயங்களில் ஒன்றைத் தான் எழுதிப் பிரசுரித்ததுண்டென்றும், ஆனால் தெய்வீகமாகவும் ஈசுவர சங்கல்பமாகவும் நேர்ந்துள்ள ஸ்வாராஜ்ஸாம்ராஜ்யத்தை இந்தியா அடையும் பொருட்டு, ஈசுவர சாக்ஷியாகநான் செய்யவேண்டியதைச்செய்தேன். அது இந்தியாவைத்தற்காலம் ஆண்டுவரும் அந்நியர்களுக்கு விரோதமாயிருந்தால் அப்படி நேர்வதுசகஜமே; அதைப்பற்றி நினைப்பதில் பிரயோசனமில்லை. ஆதலால் இந்தக்கேஸ் விசாரணையில் நான் எவ்விதத்திலும் சம்பந்தப்பட்டவனாகவில்லை. கோர்ட்டார் இஷ்டப்படி நடத்தலாம்—என்று வாக்குமூலம் எழுதிவைத்துவிட்டுச் சும்மாவிருந்து விட்டார்.

**அந்நியபத்திரிகைகள் தடுக்கப்பட்டன.**

வெளிதேசங்களிலிருந்து வரும் பத்திரிகைகளில் மூன்றுஜனங்களின் சுதந்தரச்யைதப்பற்றி அதிதீரமாகவும் தெளிவாகவும் எழுதிவந்தன. 'கெய்லிக் அமெரிக்கன்,' 'இந்தியன் ஸோஷியாலாஜிஸ்ட்,' 'ஜஸ்டிஸ்' என்னும் இம்மூன்று பத்திரிகைகளையும் இந்தியாவிற்குள் கடல் மார்க்கமாகக்கொண்டுவரக்கூடாதென்று தடுத்திருக்கிறார்கள். அந்நிய பத்திரிகைகளை யிப்படி உள்ளே வரவிடாமல் தடுத்தது கவர்மெண்டாருடைய தீரத்தைக் காட்டாமல் அவர்கள் பயத்தைக்காட்டுவதாயிருக்கிற தென்று ஜனங்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

**அர்பத்நட் மண்சுமக்கத் தண்டிக்கப் பட்டது.**

ஆகஸ்டு மீ 26வ சென்னை ஹைகோர்ட்டு ஸ்பெஷல் ஸெஷனில் கனம் சீப்ஜஸ்டிஸ் முன்னிலையில் விசாரணைக்கு வந்த அர்பத்நட் இண்டஸ்ட்ரியல்ஸ் சம்பந்தமாக நம்பிக்கைத்துரோகம் செய்த குற்றக்கேஸ் சரியாக ஒருமாசம் விசாரணையாகி ஸெப்டம்பர் மீ 25வ புதன்கிழமைய தினம் முடிவுக்கு வந்தது. மிஸ்டர் நார்டன் வெகுவாசாலமாய் அவருடைய சாமர்த்தியத்தை யெல்லாம் காட்டி அர்பத்நட் பக்ஷமாக விருந்துகேஸை நடத்தினார். அவர் சாமர்த்திய மெல்லாம் முழுப்பூசினிக்காயைச்சோற்றில் மறைக்கயத்தனித்தவன் சாமர்த்தியம்போல் பயன்படாமற் போயிற்று. சரியாக 1 மணிக்கு கனம் சீப்ஜஸ்டிஸ் அவர்கள் பாரபக்ஷமின்றி கேஸின் நுட்பங்களை சாக்ஷிகள் வாக்கு மூலத்தை யாராய்ந்து எடுத்துச்சொன்னார். ஜூரிகள் தங்கள் தீர்மானத்தை ஆலோசித்துவரத்தனியாக அவர்களுக்கு என்று ஏற்பட்ட அறைக்குள் சென்றார்கள். சுமார் 2 மணிக்குத்திரும்பி வந்து முதல் கவுண்டில் சாட்டிய குற்றம் ருசுவாகவில்லை யென்றும், 2-வது கவுண்டில் கண்டகுற்றம் ருசுவாயிற்றென்றும், மூன்றாவது கவுண்டில் கண்டகுற்றம் ருசுவாகவில்லை யென்றும் ஒருமனதாய் எல்லாரும் ஏகோபித்துச் சொல்வதாக ஜூரிகளின் போர்மான் மிஸ்டர் ஜேம்ஸ் சொன்னார். கனம் சீப்ஜஸ்டிஸ் அவர்கள் அவர்களுடைய தீர்மானத்தை யேற்றுக்கொண்டு அர்பத்நட் நம்பிக்கைத்துரோகம் செய்த கேஸ் ருசுவானது சரி யென்று கைதியை 18—மாசங்கடினக்காவலிலிருக்கத்தண்டனை விதித்தார். அர்பத்நட் பேரில் இன்னம்இரண்டு குற்றச் சாட்டுகள் விசாரிக்கப்படவேண்டியிருக்கின்றன. "இக்விடேபிள் அஸ்ஷூரென்ஸ் கம்பெனி சம்மந்தமாக மோசடிக்கேஸ் ஒன்று, மற்றொன்று ராஜாவேணுகோபால் பஹதூர்க்குரிய 3-லக்ஷ ரூபாய் சம்பந்தமாய் மோசடியாய் நடந்துகொண்ட கேஸ். இவற்றில் அடுத்தகேஸ் அக்டோபர் மீ 3வ வியாழக் கிழமையதினம் வேறொரு ஸ்பெஷல் ஜூரிகள் முன்னால் சீப்ஜஸ்டிஸ் ஸ்பெஷல் ஸெஷன்ஸில் வீற்றிருந்து விசாரணை செய்வார். இந்த ஒரு கேஸ் நடந்ததில் அர்பத்நட் பக்ஷத்திலிருந்து பேசின மிஸ்டர் நார்டனுக்கு மாத்திரம் 44-ஆயிரரூபாய் பீஸ் கொடுத்திருக்கிறார். இதைத் தவிர இதரலாயர்களுக்கு சுமார் 20-ஆயிரரூபாய் கொடுக்க நேரிட்டதாகத் தெரிகிறது. நைட் பட்டம் பெற்ற பாப்பாரதலால் வாரண்டில் பிடிபட்டதும் புற்றிலிருந்து ஈசல் கிளம்புவதுபோல் பணம் பைபையாகக் கிளம்பலாயிற்று. இன்னும் எவ்வளவு பணம் செலவழியப் போகிறதோ. சர்க்கார் பணமும் ஏராளமாகச் செலவழிகிறதே! இது ஜனங்கள் பணம்தானே!

**'டிஸெண்ட்ராலிஸேஷன் கமிஷன்.'**

இந்தியா மந்திரியாகிய மிஸ்டர் மார்லியவர்கள் இந்தியாவிலுள்ள பலமாகாணத்து கவர்ன்மெண்டுகள் செலுத்தவேண்டிய அதிகாரங்களெல்லாம் இப்பொழுது இந்தியா கவர்ன்மெண்டார் வசத்திலிருப்பதால், துரைத்தனவிஷயங்களில் அனேகசிக்குமுக்குகள் நேரிடுவதையுத்தேசித்து, அதிகாரங்களை அந்தந்த இராஜதானி கவர்ன்மெண்டார்கள் தாமே செலுத்தக்கூடியதாக என்ன ஏற்பாடு செய்யலாமென்று விசாரிக்க ஒரு ராயல் கமிஷன் நியமித்திருக்கிறார். அதில் மிஸ்டர் ஆர். ஸி. டட் அவர்கள் ஒரு மெம்பர். அந்த ராயல் கமிஷன் சபையார் நவம்பர் மீ 15உ இந்தியாவுக்கு வந்து விசாரணை செய்யத்துவக்குவார்கள்.

**அமெரிக்காவின் அனுதாபம்.**

சென்னை யுனைடெட் ஸ்டேட்ஸிலுள்ள நியூயார்க்பட்டணத்தில் பாரிஸ்டராகவிருக்கும் மிஸ்டர்மிரான் எச். பெல்ப்ஸ் என்பவர் சிலவருஷங்களுக்கு முன் இந்தியா, இலங்கைமுதலிய தேசஙகளுக்குவிஜயமாய் வந்து போனார். அப்பொழுது அவர்கொழும்புப் பட்டணத்திலுள்ள கனம் மிஸ்டர் இராமநாதன் அவர்கள் பரிச்சயம் கிடைக்க அவரையடுத்து உண்மைவிசாரித்ததில் அவருக்கு உள்ளத்திருப்தியுண்டாய் அவரையே குருவாகவற்றுக்கொண்டார். அவர் இந்தியாவில் ஸ்வதேசி ஸ்வராஜலக்ஷியங்களை முன்னிட்டு ஜனங்கள் செய்துவரும் பிரயத்தனங்களைக்கண்டு சந்தோஷித்து, அமரிக்காவின் சரித்திரத்திலிருந்து சிலவுதாரணங்களையெடுத்துக்காட்டி, விடாபிடியாய் உள்ளம் கலங்காமல் உண்மைக்குழைத்தால் கட்டாயம் நல்லகாலம் பிறக்குமென்று வற்புறுத்தி தைரியங்கூறி சென்னை ஹிந்துப்பத்திரிகைக்கு இரண்டு கடிதங்கள் எழுதியிருக்கிறார்.

**காக்கினாடாவில் நடந்தகொலை.**

காக்கினாடாவில் ரிஸர்வ்போலிஸில் கான்ஸ்டேபிளாகவிருந்த 300-ம் நெம்பர் பாஸவையா என்னும்பேர்வழி, ரிஸர்வ்போலீஸ் இன்ஸ்பெக்டராயிருந்த மிஸ்டர்எஸ்.எச். பெல்

தன்னை அவமதித்து நடத்தியதை மனதில் வைத்துக்கொண்டு அவமானம் பொறுக்கமாட்டாமல் ஆத்திரம் பொங்கின சமயத்தில், அந்த இன்ஸ்பெக்டரை சுட்டுவிட்டு தன்னையும் சுட்டுக்கொண்டுவிட்டான். கான்ஸ்டேபிள் உடனே யிறந்துபோக மிஸ்டர்பெல் ஆஸ்பத்திரிக்குக்கொண்டுபோகப்பட்டபின் பேரில் சிலகாலங்கழித்திறந்துவிட்டார். கோபதாபமின்றி வேறுவிசேஷமொன்றுமில்லையென்று தெரியவருகிறது.

**டாக்டர் கெம்ப் அபராதம் செலுத்தியது.**

காக்கிநாடாவில் நேர்ந்த கலகங்களுக்கெல்லாம் மூலகாரணமான டாக்டர் கெம்ப் என்னும், டிஸ்திரிக்ட் மெடிகல் ஆபீஸர், அவர் அடித்த பையனை கிஷ்ணராவ் அவர்பேரில் கொண்டுவந்த ஸிவில்நஷ்டப்பிராதில் ரூ. 100 தண்டம் இறுக்கும்படி நேரிட்டது. டிஸ்திரிக்ட் முனிசீப் ஜட்ஜ்மெண்டினால் டாக்டர் கெம்ப் செய்தது மிகவும் பிசகென்று நன்றாக ஏற்படுகிறது.

**சென்னை வித்யா சம்பந்தப் பொருட்காக்ஷி.**

ஆகஸ்டு மாசக்கடைசியில் சென்னையூனிவர்ஸிடி ஸெனேட் ஹாலில், வித்தியாசம்பந்தமான பொருட்காக்ஷியொன்று வைத்தார்கள். அங்கே பிள்ளைகளுக்குப்பலதுறையிலும் வித்தியாபோதனை செய்வதற்கனுகூலமான படங்கள், பொம்மைகள், மண்ணால்செய்த உவமையுருவங்கள், மாதிரிகள், புஸ்தகங்கள், படங்கள் முதலியனவெல்லாம் கிரமவரிசையாக ஒழுங்குபட வைத்துக்காட்டபட்டன. பிள்ளைகள் கிண்டர்கார்ட்டனில் செய்த மாதிரிசாமான்கள் மிகவும் விசேஷமாய் கவனிக்கதக்கவையாயிருந்தன. இன்னம் நவநவமாய் எத்தனையோ நூதனங்களைப்பார்க்கக் கூடியதாயிருந்தது. கடைசியில் கூட்டம் ஜாஸ்தியாக விருக்கிறதென்று, காலேஜ் மாணாக்கர்களையுள்ளே விடாதுதடுத்துவிட, அதனால் ஏதோ சிறிது களேபரம் நேரிட, அதற்காகச்சில மாணாக்கர்களைப் போலீஸார் பிடித்து சார்ஜ்செய்து விட்டார்கள். இருவருக்கு அபராதம் போட்டு மற்றவர்களை மாஜிஸ்திரேட்டு புத்திசொல்லி விட்டுவிட்டார். மாணாக்கர்களுக்கு புத்திசொன்னமாதிரியாக போலீஸாருக்கும் சிறிது புத்திகூறியிருந்தாரானால் நன்றாகவிருந்திருக்கும். ஏனெனில் இப்பேர்ப்பட்ட கேஸ்களில் போலீஸார் சமயோசித சாமர்தியமாக நிதானத்தைக்கைவிடாமல் நடந்துகொள்ளவேண்டியவர்களாகவிருக்கிறார்கள். அவர்கள் அப்படி நடந்துகொள்ளாதகாரணத்தால் அற்பமானவிஷயங்களெல்லாம் பிரமாதமாக வளர்ந்துபோய் வில்லங்கப் விளைக்கக்காரணமாகின்றன.

**இந்தியன்பாங்கி லிமிடெட்.**

அர்பத்நட் கம்பெனி அழிந்துபோனது முதல் ஸ்வதேசி பாங்கி யொன்று ஏற்படுத்த வேண்டுமென்று செய்து வந்த முயற்சி, கடைசியாகக்கைகூடி, சென்னை பூக்கடைத்தபாலாபீஸுக்குப் பக்கத்திலுள்ள புதியதாய்க்கட்டிய "ராமகோட்டி" கட்டடத்தில் "இந்தியன் பாங்கி, லிமிடெட்" என்னும் பேரால் ஒரு ஸ்வதேசி பாங்கி யேற்படுத்தப்பட்டு நடந்துவருகிறது. இதற்கு காரியதரிசி, ஸ்ரீமத் வித்தியாஸாகர பாண்டே என்பவர். இவர் பம்பாயிலிருந்துவந்தவர். பணவியாபாரத்தில் தேர்ந்த அனுபவமுள்ளவரென்று தெரியவருகிறது.

**மிஸ்டர் அட்கின்ஸன் கொண்டுவந்தகேஸ்.**

காகிநாடா ரிஸர்வ் பொலீஸ் தலைவரும் அஸிஸ்டெண்ட் சூபரின்டெண்டெண்டுமான மிஸ்டர் அட்கின்ஸன் சில ரிஸர்வ்போலீஸ் கான்ஸ்டேபில்கள் பேரில் கொண்டுவந்த குற்றக் கேஸ், கோதாவரி ஸெஷன்ஸ் ஜட்ஜ் திவான்பஹதூர் எம். ஓ. பார்த்தசாரதி ஐயங்கார் அவர்கள் முன்னிலையில் விசாரணை யானதில் குற்றம் ருசுவாகவில்லை யென்று கைதிகள் விடுதலைசெய்யப்பட்டார்கள். மிஸ்டர் அட்கின்ஸன் வேறொரு ஸ்டேஷனுக்கு மாற்றப்பட்டார்.

**தாதாபாய் நௌரோஜி அவர்கள் பிறந்த நாள் மகோற்சவம்.**

இந்தியர்களுக்குப்பிதாபோலுமிருந்துழைத்துவரும் மிஸ்டர் தாதாபாய் நௌரோஜியவர்கள் ஸெப்டம்பர் ௴ 4 ௳ யன்று 83-வது வயது நிறையப்பெற்றார். அவருடையபிறந்த நாள் மகோற்சவம்இந்தியாவெங்கும் வைபவமாகக் கொண்டாடப்பட்டது. அவர்தேகஸ்திதி சரியாகவில்லாமல், பிழைக்கரியஸ்திதியிலிருந்து,பின்பு தேறி, இந்தியாவுக்கு வருவதாகவிருந்தார். ஸெப்டெம்பர் ௴ 25 ௳ இந்தியாவுக்கு பிரயாணமாய்ப்புறப்பட விருக்கையில் மறுபடியும் சுரம்கண்டதால் வரக்கூடவில்லை. இப்பொழுது சுரம் விட்டுப்போய், தேகஸ்திதி அனுகூலப்பட்டு வருகிறதாகத் தெரியவருகிறது.

**திருவாங்கூர் திவான்.**

திருவாங்கூருக்கு திவானாக நியமிக்கப்பட்ட மிஸ்டர் எஸ். கோபாலாசாரியார் அந்த ஸ்தானத்திலிருந்து சமாளித்துவர மாட்டாமையால் அவருக்குபதிலாக வேறொரு திவான் நியமிக்கும்படியாக நேரிட்டுவிட்டது. அவருடைய ஸ்தானத்தில் திவானாகவிருக்க சென்னை 'கோஆபரேடிவ் க்ரெடிட்' இலாகா கலெக்டர் திவான்பஹதூர் பி. இராஜகோபாலசாரியாரைத் தெரிந்தெடுத்திருக்கிறார்கள்.

**கற்பூரமரம்.**

கற்பூரம் என்பது அப்பெயருடைய ஒரு மரத்தின் ரஸம். இந்தக்கற்பூரமரம் ஜப்பானில் விசேஷமாக வளர்ந்துவ

ருகிறது. அங்கே கற்பூரமரக்காடு வளர்த்து வருகிறார்கள். கற்பூரம் பூஜார்கமான வஸ்துவாகவிருப்பதன்றி அனேகம் கைத்தொழில்களுக்கும், மருந்துவகைகளுக்கும் உபயோகமானதாக விருக்கிறது. மேலும் இந்த சரக்கு வெடிமருந்து செய்வதில் விசேஷமாக உபயோகிக்கப்படுகிறது. ருஷியாவுக்கும் ஜப்பானுக்கும் சண்டை நடந்தபொழுது வெடி மருந்துசெய்யக் கற்பூரம் ஜாஸ்தியாகச் செலவானபடியால் சென்னையிலுள்ள கடைகளில்கூட கற்பூரம் வெகுகிராக்கியாயிருந்தது. கற்பூரமரம் பொன்னிறமான வருணமுடையதாய், கப்பல், படகு, நாற்காலி மேஜை, பெட்டி பேழை முதலிய சாமான்கள் செய்வதற்கு மிகவும் உபயோகமானதாகவிருக்கிறது. நல்ல வைரம்பாய்ந்தமரமாதலால், இழைப்புளி பட்டால் பளபளவென்று வெகு அழகாகவும் மினுக்காகவும் மழமழவென்று இருக்கிறதாம். இந்தமரம் சுமார் 120 வருஷத்துக்கு மேல் 200 வருஷம் வரையில் நீடித்திருக்கிறதாம். இதற்கு முன்னால் வேர்களிலிருந்தும், மரங்களிலிருந்தும் பாலிறக்கியதிலிருந்துமட்டும் கற்பூரம் செய்துவந்தார்கள். இப்பொழுது கிளைகளிலிருந்தும் இலைகளிலிருந்தும் கூட கற்பூரமிறக்கும் வகை கண்டு பிடித்திருக்கிறார்கள்.

**கோயமுத்தூரில் ஒருபுதிய காலேஜ்.**

கோயமுத்தூரில் புதிதாய் ஒரு முதல் கிரேட் காலேஜ் ஸ்தாபிக்க யத்தனம் செய்துவருகிறார்கள். இந்த காலேஜ் பி. ஏ. வரையில் போதிக்கும். இதற்கு 12 லக்ஷ ரூபாய் முதல்வேண்டும். ஆனால் இதில் ப்ரோபெஸ்ஸர்களாகவிருக்கிறவர்கள் மாசம் 75-ரூபாய் சம்பளத்திற்குழைப்பதாக முன்வந்திருப்பதால் சுமார் 8 லக்ஷ ரூபாய் மூலதனமிருந்தால் உடனே காலேஜ் ஸ்தாபிக்கலாமென்று தீர்மானித்திருக்கிறார்கள். இதில் பாதி கோயமுத்தூரிலே சேர்ந்துவிட்டது. இன்னம் பாதிக்கு இராஜதானி முழுவதுக்கும் விண்ணப்பம் செய்து கொண்டிருக்கிறார்கள். வேண்டிய தொகை சேர்ந்துவிட்டால் அடுத்த வருஷமே காலேஜ் திறக்க உத்தேசித்திருக்கிறார்கள்.

**சென்னை பச்சையப்பன் டிரஸ்டிகள்.**

இந்தப்பச்சையப்பன் தர்மபரிபாலன கர்த்தர்களான டிரஸ்டிகள் தங்களுக்குள் ஒற்றுமையின்றி சண்டைபோட்டுக்கொண்டு பச்சையப்பன் காலேஜையே மூடிவிடுவார்கள் போலிருக்கிறதாக பிரஸ்தாபம். சென்னை ஹைகோர்ட்டு வக்கீல்கள் பலர் சேர்ந்து இந்த தர்மசொத்துகளை விசாரிக்கும் டிரஸ்டிகளை ஆயுஸ்பரியந்தம் நியமிப்பதைவிட்டு குறித்தகாலத்துக்கொருதரம் நியமிக்கவும் இன்னம் சிலசீர்திருத்தங்களும் செய்ய ஹைகோர்ட்டாரைக்கேட்டுக்கொண்டு அதற்காக மனுக் கொடுத்திருக்கிறார்கள். இந்த மனு அக்டோபர்மீ 1௳ விசாரணைக்கு வந்து மறுபடியும் 29௳ யன்று விசாரணைக்கு வர நியமிக்கப்பட்டிருக்கிறது.

**பார்லிமெந்து சபை மெம்பர் மிஸ்டர் கெய்-ஹார்டி.**

பார்லிமெந்து சபை மெம்பர்களில் முக்கியமானவரும், உழைப்பாளிகள் கக்ஷிக்குத்தலைவருமான மிஸ்டர் கெய்ர்-ஹார்டி யவர்கள் கல்கத்தாவுக்கு வந்துசேர்ந்து, இந்தியாவிலுள்ள ஜனங்களின் நிலைமையையும், துரைத்தனப்பாங்கையும், ஜனங்கள் அதிருப்திக்கு உண்மையானகாரணம் இன்னதென்பதையும் பற்றி நேரில் விசாரித்து வருகிறார்.

**விராஜ்கஞ்ச் ஸப்டிவிஷன் ஆபீஸர்.**

மிஸ்டர் கெய்ர்-ஹார்டி எம். பி. அவர்கள் விராஜ்கஞ்ச் ஸப்டிவிஷன் ஆபீஸரோடு பேசிக்கொண்டிருந்துவிட்டு, அந்தவூர் ஜெயிலைப்பார்க்க அவரோடு போனார். அப்பொழுது மிஸ்டர் சௌத்ரி (பாரிஸ்டர்-அட்-லா) மிஸ்டர் ஹார்டிக்குத்துணையாக அவரோடு வந்திருந்தார். ஸப்டிவிஷனல் ஆபீஸர் மிஸ்டர் சௌத்திரியை அவமரியாதையாகப் பேச, அவர்திரும்பிப்பேச, இருவருக்கும் வாக்குவாதமுண்டாகக்கடைசியில் மிஸ்டர் சௌத்திரியை வெளியே போகும்படி சொன்னார். இப்படி அவரிடத்தில் மரியாதைப் பிசகாக நடந்து கொண்டதற்காக மிஸ்டர் ஹார்டி அந்த ஸப்டிவிஷனல் ஆபீஸர் நடத்தையைக்கண்டு ஆச்சிரியப்பட்டு அவரோடுகூட ஜெயில்பார்க்கவரத்தனக்கு இஷ்டமில்லையென்று திரும்பிவிட்டார். இன்னம் எத்தனையோ சில்லரை அக்கிரமங்களையெல்லாம் இந்தப்பார்லிமெந்து சபை மெம்பர் நேர் நேரில் பார்த்து, இப்படிப்பட்ட அக்கிரமங்கள் இங்கேநடப்பது சீமையிலுள்ள மஹா ஜனங்களுக்குத் தெரிந்தால் அவர்கள் உத்யோகஸ்தர்கள் நடத்தையைப்பற்றி மிகவும் கண்டித்துப் பேசுவார்களென்றும், இப்படிப்பட்ட அக்கிரமங்கள் நடக்கப்பார்த்திருக்கமாட்டார்களென்றும் சொன்னார்.